# ஆசிய - ஆப்பிரிக்காவில் இந்தியாவின்
# செல்வாக்கு குறையக் காரணமென்ன?


# தீக்கதிர்

**கம்யூனிஸ்ட் வார ஏடு**

ஆசிரியர்: என். சங்கரய்யா

கதிர் 2] ஞாயிற்றுக்கிழமை 11-10-64 15 காசு [மலர் 16


## ராஜ்யசபையில்
## தோழர் பி. ராமமூர்த்தி முழக்கம்!

ஆசிய - ஆப்பிரிக்க நாடுகளில் இந்தியாவின் மதிப்புக் குறைவதாக பல இந்தியப் பத்திரிகைகள் எழுதியுள்ளன. இதற்கு என்ன காரணம்? நம்முடைய பிரச்சார ஏற்பாடு சிறப்பாக இல்லை என்று சொல்லப்படுகிறது கடந்த சில ஆண்டுகளாக இந்தக் குறைபாட்டைப் போக்க அரசாங்கம் சாத்தியமான முயற்சிகளை செய்திருப்பார்கள் என்று கருதுகிறேன். ஆனாலும் இதனால் நம் மதிப்பு ஆசிய — ஆப்பிரிக்க நாடுகளில் உயர்ந்து விடவில்லை. இதற்கு மூலாதாரமான காரணம் உண்டு. சர்க்காரின் கவனத்திற்கு அதைக் கொண்டுவர விரும்புகிறேன். கூட்டுசேராக் கொள்கையைப் பற்றி நாம் பேசும்பொழுது, சோஷலிஸ முகாமிற்கும், ஏகாதிபத்திய முகாமிற்குமிடையில் கூட்டு சேராமல் இருப்பது என்பதே பொருளாகும். ஆனால் ஏகாதிபத்திய எதிர்ப்பு — சுதந்திரப் போராட்டங்கள் சம்பந்தமாக காலனி நாடுகளுடைய மக்களின் போராட்டங்களை ஆதரிப்பதற்கு கூட்டுசேராக் கொள்கை நமக்குத் தடையாக இருக்கக் கூடாது.

மாறாக சுதந்திரத்திற்காகப் போராடும் மக்களுக்குப் பூரண ஆதரவு கொடுக்கவேண்டியது நம் கடமையாகும்.

இந்த அம்சத்தைப் பொறுத்த வரையில் நாம் தவறுகிறோம். அல்லது இதைத் தட்டிக்கழிக்க முயலுகிறோம்; இதனால்தான் ஆசிய ஆப்பிரிக்க நாடுகளில் நம் செல்வாக்கு மிகவும் குறைந்துள்ளது. சில உதாரணங்களைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அல்ஜீரியாவில் சுதந்திரத்திற்காக ஆயுதமேந்திப் போராடிக் கொண்டிருந்தார்கள் மக்கள்; உலகமுழுவதிலும் நடைபெற்ற சுதந்திரப் போராட்டங்களின் வரலாற்றில் மிகவும் வீரஞ்செறிந்ததொரு போராட்டமாக அல்ஜீரிய மக்களின் போராட்டம் விளங்கியது. அம் மக்களின் பிரதிநிதிகள் இந்தியாவிற்கு வந்தார்கள்; அல்ஜீரிய மக்கள் அமைத்திருந்த தாற்காலிக அரசாங்கத்தை இந்திய அரசாங்கம் அங்கீகரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். இந்தியா தங்களது தாற்காலிக அரசாங்கத்தை அங்கீகரித்தால், பிரெஞ்சு அரசாங்கத்தின் கைகள் பலவீனம் அடையும் என்றும் அவர்கள் வற்புறுத்தினார்கள். நாம் அதைச் செய்தோமா? சகல ஆப்பிரிக்க நாடுகளும் அந்தத் தாற்காலிக அரசாங்கத்தை அங்கீகரித்திருந்தன. சில ஆசிய நாடுகளும் கூட அந்த அல்ஜீரிய அர

(2-ம் பக்கம் பார்க்க)

# அக்டோபர் 18-ம் நாள்

## கூடிச் சரிதம்காண கூடல் மாநகரில் அலையெனத் திரளுவீர்!

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில 7-வது மாநாடு 1964 அக்டோபர் 15—18 தேதிகளில்

**மதுரை, தமுக்கம் மைதானத்தில்**

அமைக்கப்பட்டுள்ள

**அஜய்குமார்கோஷ் நகரில்**

தியாகிகள் நினைவு அரங்கத்தில்

**ஜீவா, சீனிவாசராவ் நினைவுமன்றத்தில்**

சிறப்பாக நடைபெறும்.

அக்டோபர் 14-ம் தேதி மாநில இணைப்புக் குழுவின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் மதுரையில் நடைபெற இருக்கிறது. தோழர் பி. சுந்தரய்யா, தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் ஆகியோர் அக்டோபர் 14-ம் தேதி காலை திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் மூலம் மதுரை போய்ச் சேருவர்.

அக்டோபர் 15-ம் தேதி காலை 10 மணிக்கு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் முன்னணித் தலைவரும், ஆந்திர மாநிலக் கமிட்டியின் செயலாளருமான

**தோழர் பி. சுந்தரய்யா**

கொடியேற்றி வைப்பார்.

அதைத் தொடர்ந்து மாநில மாநாடு உடனே துவங்கும்.

தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் தமிழக கம்யூனிஸ்ட் இயக்கத்தின் புடம்போட்டெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மதுரையில் கூடுகின்றனர்.

★ கட்சியின் நகல் திட்டத்தையும், அமைப்பு விதிக்கான திருத்தங்களையும் மாநாடு விவாதிக்கும்.

★ மாநில அரசியல் ஸ்தாபன அறிக்கையை மாநாடு பரிசீலித்து கட்சியின் மேற்கொண்டு வளர்ச்சிக்கான திட்டங்களை வகுக்கும்.

★ நாட்டு மக்களின் பல கேந்திரமான பிரச்சினைகள் குறித்து மாநாடு தீர்மானங்கள் நிறைவேற்றும்.

★ மாநிலக் கட்சித் தலைமையையும், கல்கத்தாவில் அக். 31முதல் நவம்பர் 7ந்தேதி வரை நடைபெறப்போகும் 7-வது அகில இந்தியக் கட்சி மாநாட்டிற்கு பிரதிநிதிகளையும் தேர்ந்தெடுக்கும்.

அக்டோபர் 18-ம் தேதி மாலை 3 மணிக்கு மாபெரும் ஊர்வலம், மதுரை, வண்டியூர் மாரியம்மன் தெப்பக் குளத்திலிருந்து ஆரம்பித்து நான்கு மாசி வீதிகள் வழியாக தமுக்கம் மைதானம் சென்றடையும்.

செந்தொண்டர்கள், பாலர்கள், தாய்மார்கள், ஆண்கள் அனைவரும் அணி அணியாய் ஆர்ப்பாட்டத்தில் கலந்துகொள்வர். செங்கொடி தாங்கி ஏராளமான சைக்கிள்கள் பவனி வரும். சிலம்பாட்டம், ஒயிலாட்டம், மயிலாட்டம் போன்ற கலை அம்சங்கள் அணிவகுப்பின் அழகுக்கு மேலும் அணி செய்யும். முரசங்கள் முழங்கும்! கோஷங்கள் அதிரும்! ஆயிரமாயிரம் செங்கொடிகள் பட்டொளி வீசிப் பறக்கும்!

மாலை 7 மணிக்கு பிரம்மாண்டமான பொதுக்கூட்டம் தமுக்கம் மைதானத்தில் நடைபெறும்.

**தோழர்கள் பி சுந்தரய்யா, பி. ராமமூர்த்தி, எம். ஆர். வெங்கட்ராமன்**

மற்றும் பலர் பேசுவர். கலை நிகழ்ச்சிகள் உண்டு.

நேரம் நெருங்குகிறது. வண்டிகள் வாகனங்கள் தயாராகட்டும். தோழர்களே! புறப்படுங்கள்! மதுரை மாநகர் நோக்கி! அக்டோபர் 18-ம் நாள்.

**சங்கம் கூடிய மதுரையில் கூடிச் சங்கொலிப்போம்!**

**மதுரையில் மக்கள் ஜனநாயக அணிவகுப்பு வெற்றிபெறப் பாடுபடுவீர்!**

## தலையங்கம்

# மாநில மாநாட்டு கோஷங்கள்

**மா**நில மாநாட்டின் கடைசி நாள் நிகழ்ச்சியாக அக்டோபர் 18-ம் தேதி மதுரையில் நடைபெறவிருக்கும் மாபெரும் ஊர்வலத்திலும், அது ஆரம்பமாவதற்கு முன் அதில் கலந்துகொள்வதற்காக இதர இடங்களிலிருந்து வரும் ஊர்வலங்களிலும் பின்வரும் கோஷங்களை ஏற்றபடி அமைத்து முழங்கும்படி தோழர்கள் அனைவரையும் கேட்டுக்கொள்கிறோம்.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி வாழ்க !
தியாகிகள் நாமம் வாழ்க !
செங்கொடி வாழ்க !
புரட்சி ஓங்குக !
உலகத் தொழிலாளர்களே ஒன்றுசேருங்கள் !
மார்க்சிஸம்-லெனினிஸம் வாழ்க !
மக்கள் ஜனநாயக அரசை அமைப்போம் !
உலக சமாதானத்தைப் பாதுகாப்போம் !
ஏகாதிபத்திய யுத்த வெறியர்களை முறியடிப்போம் !
ஆசிய—ஆப்பிரிக்க மக்களின் ஒற்றுமை ஓங்குக !
அமெரிக்க ஏகாதிபத்யமே ஆசியாவைவிட்டு வெளியேறு!
வடவியட்னாம் மீது கை வைக்காதே !
பிரிட்டிஷ் காமன்வெல்த்தைவிட்டு வெளியேறுவோம் !
அந்நிய மூலதனச் சுரண்டலை அனுமதிக்கமாட்டோம் !
உழுபவனுக்கே நிலம்—நிலப்பிரபுத்துவச் சுரண்டலை ஒழிப்போம் !
விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்றாதே !
லேவாதேவிக் கொடுமை ஒழிக—கடன் வசதி செய்து கொடு !
விவசாயத் தொழிலாளர்களுக்குத் தரிசு நிலங்களைக் கொடு—மனைக்கட்டுகளை வழங்கு !
விலைவாசிகளைக் கட்டுப்படுத்து !
வர்த்தக சூதாட்டத்தை அனுமதியோம் !
நியாய விலைக் கடைகள் வேண்டும்—அடையாள கார்டுகள் மூலம் விநியோகம் செய் !
உணவு கொடு அல்லது வெளியேறு !
உணவு தான்ய மொத்த வர்த்தகத்தை தேசவுடமையாக்கு !
பாங்குகளை தேசவுடமையாக்கு !
ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகத்தை தேசவுடமையாக்கு!
பெட்ரோல் எண்ணெய்த் தொழிலை தேசவுடமையாக்கு!
சிறு தொழில்களுக்குப் பாதுகாப்புக் கொடு—பொற்கொல்லருக்கு வாழ்வு கொடு !
அவசரநிலைப் பிரகடனத்தை ரத்துசெய் !
பாதுகாப்புச் சட்டத்தை ரத்துசெய் !
பி. டி. இரணதிவேயை விடுதலை செய் !
அரசியல் கைதிகளை விடுதலை செய் !
ஜனநாயக உரிமைகளைப் பறிக்கதே !
தொழிற்சங்க உரிமைகளைப் பறிக்காதே !
தமிழைக் கல்லூரி பயிற்சி மொழியாக்கு !
தமிழைப் பூரண ஆட்சி மொழியாக்கு !
கட்சியின் மத்திய நிர்வாகக் கமிட்டி வாழ்க !
தோழர் முசாபர்அகமது வாழ்க !
தோழர் ஏ. கே. கோபாலன் வாழ்க !
தோழர் பி. சுந்தரய்யா வாழ்க !
தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் வாழ்க !
தோழர் எம். பசவபுன்னையா வாழ்க !
தோழர் பி. டி. இரணதிவே வாழ்க !
தோழர் பி. ராமமூர்த்தி வாழ்க !
தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் வாழ்க !
தோழர் ஜோதிபாசு வாழ்க :
தோழர் புரமோத்தாஸ்குப்தா வாழ்க !
தோழர் ஹரிகிருஷ்ணக்கோனார் வாழ்க !
தோழர் சுர்ஜித்சிங் வாழ்க !
தோழர் ஜகசித்சிங் லயால்புரி வாழ்க !

—மாநில இணைப்புக் குழு.

முதல் பக்கத் தொடர்ச்சி

# அமெரிக்க உதவியின் ஆபத்து!

சாங்கத்தை அங்கீகரித்திருந்தன. அல்ஜீரிய அரசாங்கத்தை அங்கீகரிக்க நாம் மறுத்தது. ஆசிய ஆப்பிரிக்க மக்கள் மத்தியில் பாதகமான பிரதிபலிப்பை ஏற்படுத்தியது.

காங்கோவின் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். சகல ஆசிய ஆப்பிரிக்கநாடுகளும் காங் காங்கோவிலிருந்து தங்களுடைய படைகளை வாபஸ் வாங்கிக் கொண்டன. தங்களுடைய படைகளினால் சுதந்திரமாக இயங்க இயலாது என்பதையும் தங்களுடைய படைகளை காங்கோவில் நீடித்தால் அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கே அது உதவி செய்யும் என்றும் கருதி இலங்கை உள்பட சகல ஆசிய ஆப்பிரிக்க நாடுகளும் தங்களுடைய படைகளை காங்கோவிலிருந்து வாபஸ் பெற்றுக்கொண்டன. ஆனாலும் நாம் நம்முடைய இந்தியப் படைகளை காங்கோவில் நீடித்து வைத்திருந்தோம். மகத்தான தேசபக்தரான லுமும்பா நம் கண்முன்னாலேயே கொலை செய்யப்பட்டதை நம்மால் தடுக்க முடியவில்லை. இது ஆசிய ஆப்பிரிக்க நாடுகளில் நமக்குச் சாதகமான பிரதிபலிப்பை ஏற்பத்தியதா? இல்லை. அந்நாடுகள் நம்மை சந்தேகக் கண்கொண்டு பார்த்தன,

மற்றொரு உதாரணத்தையும் எடுத்துக்கொள்வோம். சமீபத்தில் வடவியட்னாமில் டாங்கின் வளைகுடாவில் ஆக்கிரமிப்பு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அமெரிக்க 7-வது கடற்படை அங்கே சென்றது. வடவியட்னாம் கடற்கரைப்பகுதியின் மீது குண்டுகளை வீச அமெரிக்க 7-வது கடற்படை தன்னுடைய ஆகாயவிமானங்களை அனுப்பியது. 10 வருடங்களுக்கு முன்பு சூயஸ் கால்வாய் நெருக்கடி ஏற்பட்ட பொழுது, எகிப்து படையெடுக்கப்பட்ட பொழுது, நாம் அந்த படையெடுப்பிற்கெதிராக நம்குரலை உறுதியுடன் உயர்த்தினோம்; இப்பொழுது நாம் அவ்வாறு செய்யவில்லை. பசிபிக்மகாசமுத்திரத்திலும் இந்துமகா சமுத்திரத்திலும் அமெரிக்க 7-வது கடற்படை ரோந்து சுற்றிக்கொண்டு வருவதை நாம் கண்டிப்பதில்லை. இலங்கை போன்ற சின்னஞ்சிறு நாடுகள் கூடஅமெரிக்க கடற்படையின் ரோந்து நடவடிக்கைக் கெதிராக கண்டனக்குரலை எழுப்பியுள்ளன. இவையனைத்தும் ஆசிய ஆப்ரிக்க மக்களின் மீதும் அரசாங்கங்களின் மீதும் பிரதிபலிப்புகளை ஏற்படுத்தியுள்ளன.

வியட்நாமில் கண்காணிப்புக் கமிஷனின் தலைவர் என்ற முறையில் இந்தியாவிற்கு மகத்தான பொறுப்பு இருக்கிறது. நாம் அந்த பொறுப்பை எவ்வாறு நிறைவேற்றியுள்ளோம்? வியட்நாம் பிரச்னை பற்றி 1954ல் ஜெனிவாவில் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. ஒருவருட காலத்திற்குள் வியட்நாமில் தேர்தல்கள் நடத்தப்பட வேண்டுமென்றும், அத்தகைய சுதந்திரத் தேர்தல்களின் அடிப்படையில் வடக்கு, தெற்கு வியட்நாம்கள் ஐக்கியப் படுத்தப்பட வேண்டுமென்றும் அந்த உடன்பாடு கூறியது. ஆனால் 1955ல் தெற்கு வியட்நாம் மீது தியம் அரசாங்கத்தை அமெரிக்கா சுமத்தியது என்பதை நாமறிவோம். அந்தத் தியம் அரசாங்கம் ஜெனிவா உடன்படிக்கையை தன்னிச்சையாக ஒரு தலைப்பட்சமாக நிராகரித்தது. அவ்வாறு அந்த அரசாங்கம் ஜெனிவா உடன்படிக்கையை நிராகரித்ததைக் கண்டித்து பண்டித ஜவஹர்லால்நேரு அன்று இதே ராஜ்யசபையில் பேசியுள்ளார், பிறகு அமெரிக்கர்கள் தெற்கு வியட்நாமில் தங்களுடைய சொந்த படைகளைக் கொண்டுபோய்க் குவித்தார்கள்;

(7-ம் பக்கம் பார்க்க)

# திரு. என். சிவராஜ் மறைவு

தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்காக தன் வாழ்நாள் முழுதும் பணியாற்றிய குடியரசுக்கட்சித் தலைவர் திரு. என். சிவராஜ் அவர்கள் இயற்கை எய்திய செய்தி கேட்டு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு இணைப்புக்குழு ஆழ்ந்த வருத்தமுற்றது. அவரது மறைவு உரிமைக்காகப்போராடும் சகல மக்களுக்கும் ஒரு பேரிழப்பாகும்,

திரு, என். சிவராஜ் இறுதி வரையில் தாழ்த்தப்பட்ட மக்களின் நலன்களுக்காக அயராது உழைத்தார். காலஞ்சென்ற டாக்டர் அம்பேத்கர் அவர்களுடன் திரு. சிவராஜ் தாழ்த்தப்பட்ட பிற்பட்ட சமூகத்தினருக்கு அவர்தம் இன்றைய நிலையிலிருந்து முன்னேறும் வரையில் விசேஷ பாதுகாப்புகள் அளிக்கப்படுவதற்காக உறுதியாகப் போராடினார். இந்தக் கோரிக்கைகளின் நியாயத் தன்மையை உறுதியுடன் இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி ஆதரித்து வந்திருக்கிறது.

தாழ்த்தப்பட்ட மக்களில் பெரும்பாலோர் விவசாயத் தொழிலாளர்களாகவும், தொழிலாளர்களாகவும் இருப்பதால், அவர்களது உரிமைகளுக்காக சங்கம் வைத்துப் போராடி வரும் கம்யூனிஸ்டுக் கட்சி அந்த மக்களின் நல்வாழ்விற்காக தன் வாழ்நாளையே அர்ப்பணித்துக்கொண்ட திரு. சிவராஜ் அவர்களது மறைவுக்காக தன் ஆழ்ந்த துக்கத்தை தெரிவித்துக்கொள்கிறது.

திரு சிவராஜ் அவர்களது மறைவால் ஆழ்ந்த துயரத்தில் ஆழ்ந்துள்ள திருமதி மீனாம்பாள் சிவராஜிற்கும் அவரது குடும்பத்தினருக்கும் இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் தமிழ்நாடு இணைப்புக்குழு தனது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

## உலகக் கம்யூனிஸ்ட் இயக்கத்தில்

## விவாதிக்கப்பட்டுவரும் சில சித்தாந்தப் பிரச்சினைகள் குறித்து—8

# சோஷலிசத்திற்கு மாறிச்செல்வதற்கான வடிவங்களும் வாய்ப்புகளும்

**[சித்தாந்தப் பிரச்சினைகள் குறித்து 9 தோழர்கள் தயாரித்த இந்த நகல் அறிக்கையின் பிரசுரம் இந்த இதழுடன் முடிவடைகிறது —ஆசிரியர்]**

இப் பிரச்சினை குறித்து சர்வதேசத தொழிலாளி வர்க்க இயக்கத்தில் நீண்டகாலமாக விவாதம் நடந்துவந்திருக்கிறது.

இங்கிலாந்து அமெரிக்கா ஆகிய நாடுகளில்—ராணுவப் பிடிப்பும் அதிகார வர்க்கமும் வளர்வதற்கு முன்பு-சோஷலிஸத்திற்குச் சமாதான ரீதியாக மாறிச்செல்லும் சாத்தியக்கூறுகள் இருந்ததைக் குறித்து மார்க்ஸ் எழுதியிருந்தார். 1917-ம் ஆண்டு காலத்தில், இத்தகைய சாத்தியக்கூறுகள், மேற்குறித்த இரு நாடுகளிலும்கூட இனி கிடையாது என்பதை லெனின் காரண காரியங்களுடன் நிரூபித்தார். இதை இந்த அறிக்கையின் முந்தியதொரு பகுதியில் விளக்கமாகக் குறிப்பிட்டிருக்கிறோம். ராணுவப் பிடிப்பும், அதிகார வர்க்கமும் மேற்குறித்த இரண்டு நாடுகளிலும் பெரிதும் வளர்ந்துவிட்டன என்பதே லெனினுடைய முடிவுக்குக் காரணங்களாகும்.

மகத்தான அக்டோபர் புரட்சிக்குப் பின்னர், லெனினுடைய இந்தக் கருத்தை ஸ்டாலின் மீண்டும் விவரித்தார். ''தூரமான எதிர்காலத்தில், பிரதான முதலாளித்துவ நாடுகளில் தொழிலாளி வர்க்கம் வெற்றி பெற்று, முதலாளித்துவ அமைப்பு சூழ்ந்திருக்கும் இன்றைய நிலைமைக்குப் பதிலாக சோஷலிஸ அமைப்பினால் சூழப்பட்டிருக்கும் நிலைமை ஏற்பட்டால், சில முதலாளித்துவ நாடுகளில் 'சமாதான ரீதியான' வளர்ச்சிப் பாதை என்பது சாத்தியமே. அந்த முதலாளித்துவ நாடுகளின் முதலாளிகள் 'சாதகமற்ற' சர்வதேச நிலைமையின் காரணமாக, தொழிலாளி வர்க்கத்துக்குச் சாராம்சமான சலுகைகளைத் 'தானே முன்வந்து' கொடுப்பது உசிதமானதென்று கருதுவார்கள். ஆனால் இந்த உத்தேச சாத்தியப்பாடு, தூரத்திலுள்ளதொரு எதிர்காலத்திற்கு மட்டுமே பொருந்துவதாகும். உடனடியான எதிர்காலத்தைப் பொறுத்தவரை, இந்த உத்தேச சாத்தியப்பாட்டிற்கான ஆதாரம் எதுவும் கிடையாது'' என்று ஸ்வெர்ட்லாவ் பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவாற்றியபொழுது ஸ்டாலின் விளக்குகிறார். (லெனினிஸத்தின் பிரச்சினைகள்—பக்கம் 54)

அன்று ஏகாதிபத்தியத்தினால் சூழப்பட்ட நிலைமை இருந்தபொழுது, பலாத்காரத்தைக் கொண்ட தொழிலாளி வர்க்கப் புரட்சி என்ற நியதி இயங்குகிறது என்று ஸ்டாலின் வலியுறுத்திக் கூறினார். ஆனால், நீண்ட தூரப் பார்வை கொண்டதொரு மார்க்சிஸ்ட்-லெனினிஸ்ட் என்ற வகையில், ஒரு புதிய கட்டத்திற்கு—குணும்ச ரீதியில் வித்தியாசமாக அமையும் சக்திகளின் சேர்க்கை தோன்றக்கூடியதொரு புதிய கட்டத்திற்கு—இயக்கம் சரித்திர ரீதியில் வளர்ச்சியடையக்கூடுமென்பதைப் பார்க்க ஸ்டாலின் மறுக்கவில்லை. சோஷலிஸத்தினால் சூழப்படும் நிலைமை ஏற்பட்டால், சில முதலாளித்துவ நாடுகளுக்கு ஒரு 'சமாதான ரீதியான' வளர்ச்சிப் பாதையின் சாத்தியப்பாட்டை ஸ்டாலின் பார்த்தார்.

இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு, சக்திகளின் சேர்க்கை நிலை நிச்சயமாக சோஷலிசத்திற்குச் சாதகமாக மாறியுள்ளது. ஏகாதிபத்தியத்தினால் சூழப்பட்டிருந்த நிலைமை இப்பொழுது இல்லை. ஆனால் அதேசமயத்தில் சோஷலிஸத்தினால் சூழப்பட்டிருக்கும் ஒரு நிலைமை ஏற்கனவேயே அமுலுக்கு வந்துவிட்டது என்று கற்பனை செய்வது தவறானதாக இருக்கும். இந்த சமயத்தில் சோஷலிஸத்திற்குச் சமாதான ரீதியாக மாறிச் செல்லும் சாத்தியப்பாடு பல நாடுகளுக்கு உள்ளது என்ற கருத்துரை சோவியத் கட்சியின் இருபதாவது காங்கிரசினால் முன்வைக்கப்பட்டது.

இந்தக் கருத்துரை முன்வைக்கப்பட்டதைத் தொடர்ந்து, கம்யூனிஸ்ட் கட்சிகள் அதனைப் பொதுமைப்படுத்த ஆரம்பித்தன. முதலாளித்துவ நாடுகளிலிருந்த மிகப் பெரும்பான்மையான கம்யூனிஸ்ட் கட்சிகள், இந்தக் கருத்துரை தங்களின் நாடுகளுக்குப் பொருந்துகிறது என்று கூறின. இந்தக் கருத்துரை ஒரு திருத்தல்வாத வழியில் புரிந்து கொள்ளப்பட்டது. பிரச்சினையை இடம், பொருள், ஏவல் ஆகியவற்றிற்கேற்றபடியும், பூரணமாகவும் பரிசீலிப்பதற்குக் கவனமெதுவும் செலுத்தப்படவில்லை. இன்றைய சகாப்தத்தினுடைய சோஷலிஸப் புரட்சிகளின் ஒரு பொது நியதியாக சமாதான ரீதியான பாதை விளங்குகிறதுஎன்றதொரு புதிய கோட்பாட்டையே உருவாக்குவதற்குச் சமமாகும்.

இதனால், இருபதாவது காங்கிரஸ் முடிந்த ஒரு வருடத்திற்குள்ளேயே, சமாதான ரீதியான பாதை பற்றிய இந்த திருத்தல்வாத வியாக்கியானங்கள், 1957-ம் வருடத்திய மாஸ்கோ மாநாட்டில் கூர்மையான விமர்சனத்திற்கு ஆளாகின. 1957-ம் வருடத்திய மாஸ்கோ பிரகடனம் பின்வருமாறு கூறியது:—

''வெவ்வேறு நாடுகளுக்கு, சோஷலிஸத்திற்கு மாறிச் செல்லும் வடிவங்கள் மாறுபடலாம். தொழிலாளி வர்க்கமும், அதனுடைய முன்னணிப் படையான மார்க்சிஸ்ட்-லெனினிஸ்ட் கட்சியும், சமாதான ரீதியான வழிமுறைகளின் மூலம் சோஷலிசப் புரட்சியைச் சாதிப்பதற்கு முற்படுகின்றன. இது தொழிலாளி வர்க்கத்தின் நலன்களுக்கும், மக்களின் நலன்களுக்கும் பொருத்தமானதாகும். நாட்டினுடைய தேசிய நலன்களுக்கும் பொருத்தமானதாகும்.''

இந்தச் சாத்தியக்கூறு, அதை உருவாக்கத் தேவையான கடமைகள், வழிமுறைகள் பற்றி விவரித்த பின், 1957-ம் வருட மாஸ்கோப் பிரகடனம் பின்வருமாறு குறிப்பிடுகிறது:—

''மக்களுக்கெதிராக ஆளும் வர்க்கங்கள் பலாத்காரத்தில் ஈடுபடும் நிலைமை ஏற்பட்டால் சோஷலிஸத்திற்குச் சமாதான ரீதியற்ற வகையில் மாறிச்செல்லும் சாத்தியப்பாடு கவனத்தில் வைத்துக்கொள்ளப்பட வேண்டும். ஆளும் வர்க்கங்கள் தாங்களாகவே முன்வந்து அதிகாரத்தை ஒருபொழுதும் கைவிட்டுவிடுவதில்லை என்று லெனினிஸம் போதிக்கிறது. அனுபவம் அதை ஊர்ஜிதம் செய்கிறது. இந்த விஷயத்தில் வர்க்கப் போராட்டத்தின் கசப்புத் தன்மையும், வடிவங்களும் எந்த அளவு இருக்கும், எவ்வாறிருக்குமென்பது அதிகப்படியாகத் தொழிலாளி வர்க்கத்தைப் பொறுத்ததாக இருக்காது. அதற்குப் பதிலாக, மக்களின் மிக மிகப் பெரும்பான்மையானவர்களுடையசித்தத்திற்கெதிராகப் பிற்போக்கு வட்டாரங்கள் உண்டாக்கும் எதிர்ப்பைப் பொறுத்தே இருக்கும். சோஷலிஸத்திற்கான போராட்டத்தின் ஏதாவதொரு கட்டத்தில் இந்தப் பிற்போக்கு வட்டாரங்கள் பலாத்காரத்தைப் பிரயோகிப்பதைப் பொறுத்தே இருக்கும்.

சோஷலிஸத்திற்கான மாற்றத்திற்கு எந்தப் பாதை சாத்தியமென்பது ஒவ்வொரு நாட்டிலுமுள்ள ஸ்தூலமான நிலைமைகளைப் பொறுத்திருக்கிறது''

ஒவ்வொரு நாட்டிலும் நிலவும் ஸ்தூலமான நிலைமைகள்தான் இதில் முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டுமென்று இதில் வற்யுறுத்தப்பட்டுள்ளது.

சர்வதேச இயக்கத்தில் ஏற்பட்ட மேற்கூறிய விவாதங்களின் வெளிச்சத்திலும், நம் கட்சியில் அதன்பின் நடந்த விவாதங்களின் விளைவாகவும், 1958 ஏப்ரலில் நடைபெற்ற அமிர்தசரஸ் மாநாட்டில் பின்வரும் நிர்ணயிப்புக்களை நம் கட்சியின் சட்டதிட்டத்தில் நாம் இணைத்தோம்:—

## புரட்சி முரசு ஒலித்திடுவாயே!

(பாலும் பழமும் என்ற மெட்டு)

— எஸ். முத்துசாமி, திருச்சி —

மம்பட்டி தன்னைத் தோளினில் தூக்கி
மண்ணைப் பிளந்து செந்நீர் சிந்தி
உழுது உழைத்து உணவளித்தாயே
உண்பதற்கே நீ வழியிழந்தாயே (மம்பட்டி)

ஆளும் ஆட்சியில் அடியும் பட்டாயே—இதை
அகற்றவேண்டி நீ சிறை புகுந்தாயே
செங்கொடி அணியில் சேர்ந்திடுவாயே
சிவராமன் நினைவை மனதில் கொள்வாயே (மம்பட்டி)

பாடுபட்டே நீ மெலிந்தாயே
பட்ட கடனால் வாழ்விழந்தாயே
பாயும் புலிபோல் திகழ்ந்திடுவாயே
பாரத ஆட்சியை மாற்றிடுவாயே (மம்பட்டி)

சீரிய போர்அணி திரட்டிடுவாயே
செம்பதாகை ஏந்திநீ சென்றிடுவாயே
புரட்சி முரசு ஒலித்திடுவாயே
பொதுவுடமை காண நீ விரைந்திடுவாயே (மம்பட்டி)

# சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்கத்திற்கு இன்

# பிரதான அபாயம் நவீன திருத்தல்வாதமே!

''சமாதான ரீதியான வழிமுறைகளின் மூலம் முழு ஜனநாயகத்தையும், சோஷலிஸத்தையும் சாதிப்பதற்கு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி முற்படுகிறது. ஒரு வல்லமை மிக்க வெகுஜன இயக்கத்தை வளர்ப்பதன் மூலமும், பார்லிமெண்டில் ஒரு பெரும்பான்மையை வென்று வெகுஜன உத்தரவாதத்தின் மூலமும் அதை பலப்படுத்துவதன் மூலமும், பிற்போக்கின் சக்திகளை தொழிலாளி வர்க்கமும் அதனுடைய நேச சக்திகளும் முறியடிக்க முடியும். பொருளாதார, சமூக, அரசு அமைப்புக்களில் மூலாதாரமான மாற்றங்களைக் கொண்டுவருவதற்கு மக்களின் சித்தத்தினுடையதொரு கருவியாக பார்லிமெண்ட் ஆவதை உறுதிப்படுத்த முடியும்.''

இந்த நிர்ணயிப்பு சிலரால் மீண்டும் ஒரு திருத்தல்வாத வழியில் வியாக்கியானம் செய்யப்பட்டது, கட்சி முற்படுகிறது என்ற வார்த்தையின் அர்த்தத்தை மறந்துவிட்டு, சமாதான ரீதியான பாதையென்பது நம் நாட்டில் ஏதோ ஏற்கனவேயே யதார்த்தத் தன்மை பெற்றுவிட்டதொரு உண்மை என்பதுபோல இவர்கள் வற்புறுத்த ஆரம்பித்தனர். பார்லிமெண்ட் வேலை, பார்லிமெண்டிற்கு அப்பாற்பட்ட வேலை, போராட்டத்தின், ஸ்தாபன அமைப்பின் வெவ்வேறு வடிவங்களைப் பயன்படுத்துவது ஆகியவைபற்றிய சகல புரட்சிகர கருத்துக்களையும் புறக்கணித்துவிட்டு, நடைமுறையில் இது சமூக-ஜனநாயகவாதியின் அணுகும் முறையாகியது. மக்கள் மத்தியில் பிரமைகளை உண்டாக்கும் அணுகும் முறையாகியது.

1960-ல் 81 கட்சிகளின் மாநாடு மாஸ்கோவில் நடைபெற்றபொழுது, சோஷலிஸத்திற்கு மாறிச் செல்லும் வடிவங்கள் குறித்து 1957-ம் வருடத்திய பிரகடனத்தின் நிர்ணயிப்புக்களை மீண்டும் ஊர்ஜிதம் செய்வது என்று முடிவு செய்யப்பட்டது. ஆனால் இப் பிரச்சினை பற்றி நம் மத்தியில் ஏற்பட்ட தவறின் வேரைக் கண்டுபிடித்து, அதைச் சரிப்படுத்துவதற்கு நம் கட்சி நடவடிக்கை எடுக்கவில்லை. மாறாக, நடைமுறையில், இப்பிரச்சினை குறித்து திருத்தல் வாதத்தின் நிலைக்கு நம் கட்சி அசைந்து செல்கிற நிலைமை ஏற்பட்டது. சித்தாந்தத்திலும் நடைமுறையிலும் இப்போக்கு வெளிப்படுகிறது. கேரள மந்திரி சபை அமைந்தபிறகு, இப்போக்கு பலமடைந்தது. கேரள மந்திரி சபை அமைந்ததும், அதனுடைய இயங்குதலும் சேர்ந்து, சமுதாய மாற்றத்திற்கு ஒரு புதிய பாதை திறந்துள்ளதை எடுத்துக்காட்டுகிறது என்று சில முக்கிய தோழர்கள் வாதாட ஆரம்பித்தனர். ஆனால் பூர்ஷ்வா வர்க்கம் கம்யூனிஸ்ட் மந்திரி சபையை நீண்ட காலத்திற்கு அனுமதிக்கவில்லை.

நம்முடைய நாட்டின் இன்றைய ஸ்தூலமான நிலைமை என்ன? பல நூற்றாண்டுகளாக ஏகாதிபத்திய ஒடுக்குமுறைக்கு உட்பட்ட பின்னர் நாம் ஒரு புதியதாக விடுதலையடைந்த நாடாக இருக்கிறோம். இன்று நம் நாட்டில் உள்ள அரசு இயந்திரம், பரம்பரையாக முதலாளித்துவ நாடுகளாக இருக்கும் பல நாடுகளில் இருப்பதைப் போன்ற அளவிற்கு வளர்ச்சியும், பூரணத்துவமும் பெறவில்லை என்பது உண்மை. நம் நாட்டிலுள்ள ஆளும் வர்க்கங்கள், வேறு சில நாடுகளிலும் அரசுகளிலும் இருப்பதைப்போன்று, ராணுவ ஆதிக்க முறை உணர்விலும் (Militarism) பலாத்காரத்திலும் பிறந்து, வளர்ந்து பயிற்றுவிக்கப்பட்டிருக்கவில்லை என்பதும் உண்மை. ஆனாலும் சுரண்டும் வர்க்கமாகத்தானே இருக்கிறது. ஏகாதிபத்தியத்திடமிருந்து அரசை எடுத்துக்கொண்டுள்ள பூர்ஷ்வா — நிலப்பிரபுத்துவ அரசாங்கம், தன்னுடைய சுரண்டலை உறுதிப்படுத்துவதற்கும், நீடிப்பதற்கும், அரசு அமைப்பை, மக்களுக்கெதிராக உபயோகித்துக்கொண்டு வருகிறது. கடந்த பதினேழு ஆண்டுகளின் போக்கில், போலீசும் ராணுவமும் இரு மடங்காகவும் மும் மடங்காகவும் அதிகரிக்கப்பட்டுள்ளன. தொழிலாளர்கள், விவசாயிகளின் போராட்டங்களைப் போலீசைக்கொண்டும், ராணுவத்தைக்கொண்டும் ஈவிரக்கமற்ற வகையில் ஒடுக்குகிறது இந்திய அரசு.

இந்த உண்மையின் வெளிச்சத்தில், சித்திரத்தின் மற்றொரு பக்கத்தையும் பரிசீலனைசெய்வோம். ஜனநாயகம் நம்முடைய நாட்டில் சமீபத்தில் கொண்டுவரப்பட்டுள்ளது. அது ஆழமான வேர்களை இன்னும் பரப்பவில்லை, தொழிலாளி வர்க்கமும் மற்ற வெகுஜன ஸ்தாபனங்களும் ஒன்றுபடுத்தப்படவில்லை, சக்தியாக கட்டியமைக்கப்படவில்லை கம்யூனிஸ்ட் கட்சியும் பலவீனமாக உள்ளது. இடது அல்லது வலதை சேர்ந்த மிகப் பெரும்பான்மையான கட்சிகள் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு உணர்வுடன் இருக்கின்றன ஆளுங்கட்சி தீர்மானமான கம்யூனிஸ்ட் எதிர்ப்புக் கட்சியாக இருக்கிறது. அதிகார வர்க்கமும் ராணுவப் படைகளும், அரசியல், சமுதாய நடவடிக்கைகளிலிருந்து கறாரானவகையில் தனிமைப்படுத்தி வைக்கப்பட்டுள்ளன. இந்த உண்மை அனைத்திலும் முன்னிலையில் நம்முடைய நாட்டில் சமாதான ரீதியான பாதை என்பது ஏறக்குறைய ஒரு யதார்த்தமாகி விட்ட உண்மை என்று பேசுவது தவிர்க்கப்பட முடியாததொரு பாதையாகிவிட்டது என்று பேசுவது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வதாகும். இன்றுள்ள நிலைமையில் அடங்கியுள்ள சமாதான ரீதியான பாதைக்குள்ள சாத்தியக் கூறுகளையும் பின்வரும் கடமைகளை நிறைவேற்றுவதன் மூலமாக மட்டுமே அடைய முடியும்.

1) அன்னிய ஏகாதிபத்திய செல்வாக்கு—பொருளாதார அரசியல், ராஜதந்திர மற்றும் ராணுவத்துறையில் அகற்றப்படவேண்டும். அந்த திசைவழியில் ஒரு முன்பின் முரணற்ற போராட்டம் நடத்தப்படவேண்டும்.

2) சீரழிந்துபோன காலாவதியாகி சூன்யமான கம்யூனிஸ்ட் எதிர்ப்புச் சித்தாந்தம் அம்பலப்படுத்தப்பட வேண்டும்; தோற்கடிக்கப்படவேண்டும்; தனிமைப் படுத்தப்படவேண்டும்.

3) சமுதாய வாழ்வின் சகல துறைகளிலும் ஜனநாயகம் உறுதிப் படுத்தப்பட வேண்டும்; விஸ்தரிக்கப்பட வேண்டும்; முன் கொண்டு செல்லப்பட வேண்டும்.

4) ஒரு சக்திமிக்க ஒன்றுபட்ட தொழிலாளி வர்க்க இயக்கம் கட்டப்பட வேண்டும்; ஸ்தாபன ரீதியாக ஒன்றுபடுத்தப்பட்டுள்ள விவசாயிகள் இயக்கத்துடன் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் நேச அணி உறுதியாக பிணைக்கப்பட வேண்டும்.

5) மார்க்சிஸம்—லெனினிஸம் என்ற உருக்கு அடித்தளத்தின் மீது அமைக்கப்படுகிறதொரு கம்யூனிஸ்ட் கட்சி, சகல உழைக்கும் மக்களுடைய லட்சக்கணக்கான புதல்வர்களையும் புதல்விகளையும் கொண்டு அமைக்கப்படுகிறதொரு கம்யூனிஸ்ட் கட்சி கட்டப்பட வேண்டும்.

6) போலீஸ், அதிகார வர்க்கம், நிர்வாக அமைப்பு முறை ஆகியவை ஜனநாயகத் தன்மை கொண்டவையாக ஆக்கப்பட வேண்டும்; சமுதாயத்தின் ஜனநாயக, அரசியல் போக்குகளிலிருந்து இன்று அவை தனிமைப் படுத்தி வைக்கப்பட்டுள்ள நிலை உடைக்கப்படவேண்டும்.

7) புரட்சியை முன்னுக்குக் கொண்டு செல்வதில் அக்கறை கொண்டுள்ள சகல வர்க்கங்கள், கட்சிகள் ஆகியவற்றின் ஒரு விரிவான ஐக்கிய முன்னணி உருவாக்கப்படவேண்டும்.

மேற் கூறப்பட்டுள்ள கடமைகள் அனைத்தும் வெற்றிகரமாக நிறைவேற்றப்படும் பொழுது, புரட்சியை நசுக்குவதற்கு பலாத்காரத்தைக் கட்டவிழ்த்து விடுவதினின்றும் பூர்ஷ்வா வர்க்கத்தை தடுத்து நிறுத்தக் கூடிய சாத்தியப்பாடு, ஒரு யதார்த்த உண்மையாகும். மேலே கூறப்பட்டுள்ள ஜீவாதாரமான கடமைகளில் எதையேனும் நிறைவேற்றமுடியவிட்டால், ஒரு சமாதான ரீதியான பாதைக்கு இருக்கும் சாத்தியப்பாடுகளை அடையத் தவறுவதாகும். அபாயகரமான பிரமைகளுக்கு இரையாவதாகும். கட்சியையும் வெகுஜன இயக்கங்களையும் கட்டி வளர்க்கும் நம்முடைய சகல நடவடிக்கைகளும் இந்த உணர்வைப் பிரதிபலிக்க வேண்டும்.

1960-ம் ஆண்டில் மாஸ்கோவில் நடைபெற்ற 81 கட்சிகளின் கூட்டறிக்கை, 1957-ம் வருடத்திய பிரகடனத்தை ஊர்ஜிதம் செய்து திருத்தல் வாதமே பிரதான அபாயமென்பதை வற்புறுத்தியது; யுகோஸ்லோவிய கம்யூனிஸ்ட் கழகத்திற்கு எதிராகக் கடுமையான விமர்சனக் கணையை தொடுத்தது. ''சர்வதேச சந்தர்ப்பவாதத்தின் யுகோஸ்லாவிய ரகத்தை, நவீன திருத்தல்வாதத் 'தத்துவங்களை'க் குவிந்ததொரு வடிவத்தில் வெளிப்படுத்தும் யுகோஸ்லோவிய ரகத்தை கம்யூனிஸ்ட் கட்சிகள் ஏகமனதாகக் கண்டனம் செய்துள்ளன'' என்றும் ''யுகோஸ்லாவிய திருத்தல் வாதிகளுடைய லெனினிய எதிர்ப்புக் கருத்துக்களிடமிருந்து கம்யூனிஸ்ட் இயக்கத்தையும், தொழிலாளி வர்க்க இயக்கத்தையும் பாதுகாப்பதற்கு விறுவிறுப்புடன் போராடுவது மார்க்சிய-லெனினியக் கட்சிகளின் ஒரு அத்தியாவசியமான கடமை'' என்றும் 81 கட்சிகளின் கூட்டறிக்கை அறைகூவி அழைத்தது.

சோவியத் கட்சியின் 22-வது காங்கிரஸ் நிறைவேற்றிய புதிய திட்டம், ''திருத்தல் வாதத்தின் சித்தாந்தம் யுகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கழகத்தின் திட்டத்தில் மிகவும் பூரணமாக அமைந்திருக்கிறது'' என்று வரையறுத்தது.

யுகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கழகத்தின் கண்ணோட்டம் என்ன மாஸ்கோ 81 கட்சிகளின் கூட்டறிக்கை, சோஷலிஸ லட்சியத்திற்கு மட்டுமல்லாமல், உலகம் முழுவதிலும் சமாதானத்தை உறுதிப் படுத்துவதற்கும் கூட கேடுவிளைவிக்கும் விளைவுகளை மட்டுமே உண்டாக்கும்'' என்று 1961பிப்ரவரிமாதத்தில் யுகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கழகத்தின் மத்திய நிர்வாகக் கமிட்டி, மாஸ்கோ அறிக்கை பற்றியதொரு தீர்மானத்தில் குறிப்பிட்டது.

யூகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கழகம் தன்னுடைய திருத்தல் வாத நிலைகளை எந்தஒரு பிரச்சினையிலும் மாற்றிக்கொள்ளவில்லை அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், சோவியத் கட்சியின் தலைவர்கள் அக்கழகம் பற்றி தங்களுடைய கண்ணோட்டம் முழுவதையும் ஆச்சரியகரமாக மாற்றிக்கொண்டுள்ளனர். இதைத் தொடர்ந்து வேறுபல கட்சிகளும் யுகோஸ்லாவிய கழகத்தின் தூதுக் குழுக்களை தங்களுடைய மாநாடுகளுக்கு அழைத்தன.

1957லிருந்து 1961 வரை தாங்கள் சொல்லிக்கொண்டு வந்ததற்கு முற்றிலும் மாறாக யுகோஸ்லாவிய திருத்தல் வாதக் கழகம் தன்னுடைய கொள்கை நிலைகளை மாற்றிக்கொண்டு விட்டதென்று சோவியத் கட்சித் தலைவர்கள் கூறுகிறார்கள்; இதற்கு ஆதாரமெதுவுமிருப்பதாக நமக்குத் தோன்றவில்லை, பிரதான அபாயம் திருத்தல்வாதமே என்ற 81 கட்சிகளின் நிர்ணயிப்பையும் சோவியத் கட்சித் தலைவர்கள் தன்னிச்சையாகக் கைவிட விரும்புகிறார்கள். இதனால் சர்வதேசக் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் நவீன திருத்தல்வாதத்தின் அபாயத்தை அவர்கள் அதிகரிக்கிறார்கள்.

நம்முடைய கட்சியில் கடுமையான வலதுசாரி இடதுசாரி சந்தர்ப்பவாதத்திரிபுகள் நிகழ்ந்தனவற்றை மட்டும் இங்கு பரிசீலிப்போம்.

1948-ம் ஆண்டில் கட்சியின் இரண்டாவது காங்கிரஸ் நடைபெற்றது. நீண்டகாலமாக நிலவிவந்த வலதுசாரித் திரிபை அகற்ற நாம் இந்தக் காங்கிரஸில் முயற்சித்தோம். இந்த முயற்சியில் நம் கட்சி 1948-51-ம் ஆண்டுகளுக்கிடையில், இடதுசாரி செக்டேரியனிசத்திற்குள் சிக்கியது.

இந்த இடதுசாரி செக்டேரியன் தவறுகள் பின்வருமாறு வெளிப்பட்டன; அதிகார மாற்றத்திற்குப் பின்னர், இந்திய பூர்ஷ்வா வர்க்கம், புரட்சியைக் காட்டிக் கொடுத்து விட்டு, இறுதியாகவும் மீளமுடியாத வகையிலும் ஏகாதிபத்தியத்திடம் சென்றடைந்து விட்டது என்று வரையறுத்தோம், இரண்டாவதாக ஒருபுறத்தில் ஏகாதிபத்தியத்துடனும், மறுபுறத்தில் நிலப் பிரபுத்துவத்துடனும், ஒரு வர்க்கமென்ற வகையில், இந்திய பூர்ஷ்வா வர்க்கம் முழுவதற்குமிருந்த முரண்பாட்டை இடதுசாரி செக்டேரியனிஸம் குறைத்து மதிப்பிட்டது. மூன்றாவதாக, புரட்சியின் கட்டத்தை இடதுசாரி திரிபு குழப்பியது. புரட்சியின் ஜனநாயகக் கட்டத்தையும் சோஷலிஸ கட்டத்தையும் ஒரே கட்டமாக இணைத்து, நம் புரட்சியை ஒரே ஒரு கட்டமுள்ளதாகத் தவறாகக் கருதியது. நாலாவதாக முதலாளித்துவத்தின் பொது நெருக்கடி பற்றியும், அதனுடைய செல்வாக்கின்கீழ் தன்னிச்சையாக ஏற்படும் வெகு ஜன எழுச்சி பற்றியும் கொச்சையானதொரு வகையில் இடதுசாரித்திரிபு புரிந்துகொண்டது; தன்னிச்சையாக ஏற்படும் நிலைமையை ஆதாரமாகக் கொண்டு தன்னுடைய அன்றுபோர்த்தந்திரத்தையும், போராட்ட வடிவங்களையும் இந்த திரிபு உருவாக்கமுயற்சித்தது. கடைசியாக ருஷ்யப் புரட்சியின் அனுபவத்தையும், சீனப் புரட்சியின் அனுபவத்தையும் யாந்திரீகமாகப் பிரயோகிப்பதற்கு இந்த இடதுசாரி செக்டேரியன் திரிபு முற்பட்டது.

பிறகு, இந்த செக்டேரியன் திரிபைத் திருத்தும்பொழுது, இடதுசாரி, வலதுசாரி திரிபுகளுக்கெதிராக ஒரு நிதானமான போராட்டத்தை இரண்டு திரிபுகளுக்கும் இடமளிக்காததொரு போராட்டத்தை நடத்த முடியாமல் போய்விட்டது.

1951-ல் அங்கீகரிக்கப்பட்ட கட்சியின் திட்டம் இடதுசாரி செக்டேரியன திரிபிலிருந்து கட்சியை வெளியே கொண்டுவந்தது இருந்தபோதிலும், வறட்டுத்

# இயக்கத்திற்கு இன்றைய
# திருத்தல்வாதமே!

கூட்டறிக்கை, 1957-ம் வருடத்திய பிரகடனத்தை ஊர்ஜிதம் செய்து திருத்தல் வாதமே பிரதான அபாயமென்பதை வற்புறுத்தியது; யுகோஸ்லோவிய கம்யூனிஸ்ட் கழகத்திற் கெதிராகக் கடுமையான விமர்சனக் கணையை தொடுத்தது. ''சர்வதேச சந்தர்ப்பவாதத்தின் யுகோஸ்லாவியரகத்தை, நவீன திருத்தல் வாதத் 'தத்துவங்களை'க் குவிந்ததொரு வடிவத்தில் வெளிப்படுத்தும் யுகோஸ்லோவிய ரகத்தை கம்யூனிஸ்ட் கட்சிகள் ஏகமனதாகக் கண்டனம் செய்துள்ளன'' என்றும் ''யுகோஸ்லாவிய திருத்தல் வாதிகளுடைய லெனினிய எதிர்ப்புக் கருத்துக்களிடமிருந்து கம்யூனிஸ்ட் இயக்கத்தையும், தொழிலாளி வர்க்க இயக்கத்தையும் பாதுகாப்பதற்கு விறுவிறுப்புடன் போராடுவது மார்க்சிய-லெனினியக் கட்சிகளின் ஒரு அத்தியாவசியமான கடமை'' யென்றும் 81 கட்சிகளின் கூட்டறிக்கை அறைகூவி அழைத்தது.

சோவியத் கட்சியின் 22-வது காங்கிரஸ் நிறைவேற்றிய புதிய திட்டம், ''திருத்தல் வாதத்தின் சித்தாந்தம் யுகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கழகத்தின் திட்டத்தில் மிகவும் பூரணமாக அமைந்திருக்கிறது'' என்று வரையறுத்தது.

யுகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கழகத்தின் கண்ணோட்டம் என்ன மாஸ்கோ 81 கட்சிகளின் கூட்டறிக்கை, சோஷலிஸ லட்சியத்திற்கு மட்டுமல்லாமல், உலகம் முழுவதிலும் சமாதானத்தை உறுதிப் படுத்துவதற்கும் கூட கேடுவிளைவிக்கும் விளைவுகளை மட்டுமே உண்டாக்கும்'' என்று 1961 பிப்ரவரி மாதத்தில் யுகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கழகத்தின் மத்திய நிர்வாகக் கமிட்டி, மாஸ்கோ அறிக்கை பற்றியதொரு தீர்மானத்தில் குறிப்பிட்டது.

யூகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கழகம் தன்னுடைய திருத்தல் வாத நிலைகளை எந்தஒரு பிரச்சினையிலும் மாற்றிக்கொள்ளவில்லை. அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், சோவியத் கட்சியின் தலைவர்கள் அக்கழகம் பற்றி தங்களுடைய கண்ணோட்டம் முழுவதையும் ஆச்சரியகரமாக மாற்றிக்கொண்டுள்ளனர். இதைத் தொடர்ந்து வேறுபல கட்சிகளும் யுகோஸ்லாவிய கழகத்தின் தூதுக் குழுக்களை தங்களுடைய மாநாடுகளுக்கு அழைத்தன.

1957லிருந்து 1961 வரை தாங்கள் சொல்லிக்கொண்டு வந்ததற்கு முற்றிலும் மாறாக யுகோஸ்லாவிய திருத்தல் வாதக் கழகம் தன்னுடைய கொள்கை நிலைகளை மாற்றிக்கொண்டு விட்டதென்று சோவியத் கட்சித் தலைவர்கள் கூறுகிறார்கள்; இதற்கு ஆதாரமெதுவுமிருப்பதாக நமக்குத் தோன்றவில்லை, பிரதான அபாயம் திருத்தல்வாதமே என்ற 81 கட்சிகளின் நிர்ணயிப்பையும் சோவியத் கட்சித் தலைவர்கள் தன்னிச்சையாகக் கைவிட விரும்புகிறார்கள். இதனால் சர்வதேசக் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் நவீன திருத்தல் வாதத்தின் அபாயத்தை அவர்கள் அதிகரிக்கிறார்கள்.

நம்முடைய கட்சியில் கடுமையான வலதுசாரி இடதுசாரி சந்தர்ப்பவாதத்திரிபுகள் நிகழ்ந்தன வற்றை மட்டும் இங்கு பரிசீலிப் போம்.

1948-ம் ஆண்டில் கட்சியின் இரண்டாவது காங்கிரஸ் நடைபெற்றது. நீண்டகாலமாக நிலவிவந்த வலதுசாரித் திரிபை அகற்ற நாம் இந்தக் காங்கிரசில் முயற்சித்தோம். இந்த முயற்சியில் நம் கட்சி 1948-51-ம் ஆண்டுகளுக்கிடையில், இடதுசாரி செக்டேரியனிசத்திற்குள் சிக்கியது.

இந்த இடதுசாரி செக்டேரியன் தவறுகள் பின்வருமாறு வெளிப்பட்டன; அதிகார மாற்றத்திற்குப் பின்னர், இந்திய பூர்ஷ்வா வர்க்கம், புரட்சியைக் காட்டிக் கொடுத்து விட்டு, இறுதியாகவும் மீளமுடியாத வகையிலும் ஏகாதிபத்தியத்திடம் சென்றடைந்து விட்டது என்று வரையறுத்தோம், இரண்டாவதாக ஒருபுறத்தில் ஏகாதிபத்தியத்துடனும், மறுபுறத்தில் நிலப் பிரபுத்துவத்துடனும், ஒரு வர்க்கமென்ற வகையில், இந்திய பூர்ஷ்வா வர்க்கம் முழுவதற்குமிருந்த முரண்பாட்டை இடதுசாரி செக்டேரியனிஸம் குறைத்து மதிப்பிட்டது. மூன்றாவதாக, புரட்சியின் கட்டத்தை இடதுசாரி திரிபு, குழப்பியது. புரட்சியின் ஜனநாயகக் கட்டத்தையும் சோஷலிஸ கட்டத்தையும் ஒரே கட்டமாக இணைத்து, நம் புரட்சியை ஒரே ஒரு கட்டமுள்ளதாகத் தவறாகக் கருதியது. நாலாவதாக முதலாளித்துவத்தின் பொது நெருக்கடி பற்றியும், அதனுடைய செல்வாக்கின்கீழ் தன்னிச்சையாக ஏற்படும் வெகு ஜன எழுச்சி பற்றியும் கொச்சையானதொரு வகையில் இடதுசாரித்திரிபு புரிந்துகொண்டது; தன்னிச்சையாக ஏற்படும் நிலைமையை ஆதாரமாகக் கொண்டு தன்னுடைய அன்றாட போர்த்தந்திரத்தையும், போராட்ட வடிவங்களையும் இந்தத் திரிபுஉருவாக்கமுயற்சித்தது. கடைசியாக ருஷ்யப் புரட்சியின் அனுபவத்தையும், சீனப் புரட்சியின் அனுபவத்தையும் யாந்ரீகமாகப் பிரயோகிப்பதற்கு இந்த இடதுசாரி செக்டேரியன் திரிபு முற்பட்டது.

பிறகு, இந்த செக்டேரியன் திரிபைத் திருத்தும்பொழுது, இடதுசாரி, வலதுசாரி திரிபுகளுக்கெதிராக ஒரு நிதானமான போராட்டத்தை இரண்டு திரிபுகளுக்கும் இடமளிக்காததொரு போராட்டத்தை நடத்த முடியாமல் போய்விட்டது.

1951-ல் அங்கீகரிக்கப்பட்ட கட்சியின் திட்டம் இடதுசாரி செக்டேரியன திரிபிலிருந்து கட்சியை வெளியே கொண்டுவந்தது இருந்தபோதிலும், வறட்டுத் தத்துவ போக்குகள் நீடித்தன. குறிப்பாக நம் நாட்டிற்குக் கிடைத்த அரசியல்சுதந்திரத்தின் தன்மை பற்றிய பிரச்சினை நம்மை தொடர்ந்து பாதித்தது. உலக சோஷலிஸ முகாமின் வளர்ச்சி, ஏகாதிபத்தியத்தின் பலவீனம் ஆகியவற்றைப் போதுமான அளவு நாம் சரியாக மதிப்பிடாத காரணத்தினால், நம் நாட்டின் சுதந்திரத்தை உறுதிப் படுத்திக் கொள்வதற்கும், அதைப் பெயரளவிற்குள்ள சுதந்திரமாக மாற்றுவதற்கு ஏகாதிபத்திய வாதிகள் செய்யக்கூடிய முயற்சிகளை தோற்கடிப்பதற்குமுள்ள புதிய வாய்ப்புகளை நாம் குறைத்து மதிப்பிட்டோம்; இந்தத் தவறிலிருந்து, இந்திய பூர்ஷ்வா வர்க்கத்தின், அதனுடைய அரசின் சாத்தியக் கூறுகளையும், ஒரு சுயேச்சையான கூட்டுசேரா அயல்நாட்டுக்கொள்கையைப் பின்பற்றுவதற்கும், உள்நாட்டில் பொருளாதார வளர்ச்சிக்கான முயற்சிகளில் ஈடுபடுவதற்கும் இந்திய பூர்ஷ்வா வர்க்கத்திற்குள்ள சக்தியைக் குறைத்து மதிப்பிடும் நிலை ஏற்பட்டது.

அதே சமயத்தில், இடதுசாரித் திரிபிற் கெதிரான போராட்டத்தில் அப்பட்டமான வலதுசாரி சீர்திருத்த வாதக் கருத்துக்கள் நம் கட்சிக்குள் ஊடுருவின. கட்சியின் கட்டுப்பாடு மிகவும்பாதிக்கப்பட்டது. ஜனநாயக மத்தியத்துவம் என்ற கருத்து கடுமையாக எதிர்க்கப்பட்டது. வறட்டுத் தத்துவவாதத்தை எதிர்த்துப் போராடுவதென்ற பெயரில், சித்தாந்தம், மார்க்சிஸ நூல்களைப் படிப்பது ஆகியவை குறித்து அவமதிப்பு எண்ணம் வளர்ந்தது, இந்த நிலைமைகளில் இந்தக் காலகட்டத்தில் வலதுசாரி, இடதுசாரிதிரிபுகள் இரண்டும் நம்மை பாதித்து வந்தன; ஒருசமயத்தில் ஒரு திரிபும், இன்னொரு சமயத்தில் மற்றொரு திரிபும் மேலோங்கியது. சோவியத் கட்சியின் 20-வது காங்கிரசுக்குப் பின்னர், திருத்தல்வாதத்தை நோக்கி நம்கட்சி மேலும் மேலும் ஆடி அசைந்து சென்றது.

நம் நாட்டின் சுதந்திரம் பற்றி இருந்த செக்டேரியன் தவறுகளை திருத்தும்பொழுது, வலது சாரித் திரிபு தலைதூக்கியது; அதாவது ஏகாதிபத்தியத்தினாலும், அதனுடைய மூலதனத்தினாலும் ஏற்படும் அபாயத்தைக் குறைத்து மதிப்பிடுவது, நம் நாட்டின் சுதந்திரம் ஏறக்குறைய பூர்ணத்துவம் அடைந்து விட்டதென்று கருதுவது சமாதானம் மற்றும் கூட்டு சேராக்கொள்கை என்பது யாராலும் அசைக்கப்பட முடியாத தன்மை பெற்றுவிட்டது என்று கருதுவது நம்முடைய புரட்சியின் ஜனநாயகக் கடமைகளை இந்திய பூர்ஷ்வா வர்க்கம் ஏறக்குறைய பூர்த்தி செய்துவிடும் என்ற கருத்திற்கு உடன்படுவது ஆகிய வலது சாரி சீர்திருத்தவாதத் திரிபின் போக்குகள் நம் கட்சியில் தலை தூக்கின. சுருக்கமாகச் சொல்வதென்றால், வலதுசாரி சந்தர்ப்ப வாதமும், திருத்தல் வாதமும் நெடுகலும் வளர்ந்தன; மார்க்சிஸம் — லெனினிஸத்தின் அடிப்படைக் கோட்பாடுகளையும், தொழி

(6-ம் பக்கம் பார்க்க)

## உணவுப் பொருள்களின் விலை உயர்வைக் கண்டித்து வேலூரில் சர்வகட்சி உணவுக் கிளர்ச்சி!

19-9-64 அன்று வேலூரில் தோழர் ஏ.கே. தண்டபாணி தலைமையில் நடைபெற்ற சர்வகட்சி தொழிற்சங்கங்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகள் அடங்கிய கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவின்படி 25—9—64 அன்று மாலை 5 மணிக்கு வேலூர் டவுன் ஹாலிருந்து சர்வ கட்சிகள், தொழிற்சங்கங்கள் சார்பாக கம்யூனிஸ்ட் கட்சி இடதுசாரி, வலதுசாரி, தி.மு.க. சம்யுக்தசோஷலிஸ்ட்கட்சி, தமிழரசுக் கழகம், குடியரசுக் கட்சி, வ. ஆ. ஜில்லா மோட்டார் தொழிலாளர் சங்கம், ஓட்டல் தொழிலாளர் சங்கம். பீடித் தொழிலாளர் சங்கம் ஆகியவற்றின் கொடிகளுடன் ஒரு பெரும் ஊர்வலம் புறப்பட்டு வேலூர் கோட்டைவெளியில் முடிந்தது.

விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்து! அரிசி விலையைக் குறை! உணவு தானிய வியாபாரத்தை அரசாங்கமே ஏற்று நடத்து! பாங்குகளை தேசிய மயமாக்கு; விலைவாசியைக் குறைக்காத காங்கிரஸ் சர்க்காரே ராஜினாமா செய்! என்ற கோஷங்கள் ஊர்வலத்தில் முழங்கின.

மாலை 7-மணிக்கு வேலூர் கோட்டை வெளியில் சர்வ கட்சிகள் தொழிற்சங்கங்களின் பொதுக்கூட்டம் நடைபெற்றது. நகராட்சித் தலைவர் எம். பி. சாரதி (தி. மு. க,) தலைமை வகித்தார். சர்க்காரின் உணவுக் கொள்கையையும் விலைவாசி ஏற்றத்தையும் கண்டித்து தோழர்கள் ஏ. கே. தண்டபாணி (கம்யூ. இடது) வி. கே. குப்புசாமி எம்.சி. (தமிழரசு) எல். சுப்ரமணியம் (குடியரசு) கே. ஆர். சுந்தரம் (மோட்டார் தொழிலாளர் சங்கம்) வி. எஸ். கிருஷ்ணன் (கம்யூ. வலது) வே. கண்ணன் (பீடித் தொழிலாளர் சங்கம்) திருக்கோவிலூர் சுந்தரம் (சம்யுக்த சோஷலிஸ்ட்) பி. முனிவேலு ஆகியோர் பேசினர்.

மொத்த வியாபாரத்தை அரசாங்கமே மேற்கொள்ள வற்புறுத்தியும் விலைவாசி உயர்வை கண்டித்தும் 500 பேருக்கு ஒரு நியாய விலைக்கடை திறக்கக் கோரியும் உற்பத்தி செய்யும் விவசாயிகளும், உபயோகிக்கும் பொதுமக்களும் பாதிக்கப்படாத வகையில் விலை நிர்ணயிக்கப்படவேண்டும் என்றும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

★

## திருமங்கலத்தில் சர்வகட்சி உணவு போராட்ட உடன்பாடு.

23—9—64 இரவு 10 மணிக்கு சர்வகட்சி உணவுகமிட்டி கூட்டம் தோழர் என். ராமச்சந்திரன் (சம்யூ) தலைமையில் கூடியது. தோழர்கள் மன்னார், மதி (தி.மு.க) அ. முகம்மது (தமிழரசு) எஸ். எஸ். ஆறுமுகம், எம். பி. கணேசன் (கம்யூ இடது) கே. பி. முகம்மது இப்ராஹிம் (கம்யூனிஸ்ட் வலது) மு. பாச்ல்சாமிதேவர் (சுதந்திரா) ஆதிநாராயணன் (விசேஷ அமைப்பாளர்) ஆகியோர் கலந்து கொண்டனர்.

அடையாளக் கார்டு அடிப்படையில் கலப்பற்ற உணவுப் பொருள்கள், நல்ல அரிசி விநியோகிக்கப்பட வேண்டுமென்றும், தனியார் கொள்ளையை நிறுத்த கூட்டுறவு சொஸைடி கடைகள் மூலமாக அரிசி விநியோகிக்கப்பட வேண்டு மென்றும், உடனடியாக ஆறு கடைகளாவது திறக்கப்பட வேண்டுமென்றும், விநியோகிக்கப்படும் உணவு தானியங்களை சர்வ கட்சி உணவுக்கமிட்டி வாரமொருமுறை கூடிப் பரிசீலிக்க வேண்டுமென்றும், உணவுதானியங்கள் காலை 8 மணி முதல் விநியோகிக்கப்பட வேண்டுமென்றும் மீண்டும் 24-9-64 அன்றுகூடி சர்வகட்சி கமிட்டியின் நிர்வாகிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

★

## பாரத்தோடு கிராமத்தில் சத்தியாக்கிரகம்

25-9-64 அன்று கேரளாவிலுள்ள உடும்பன் சோலை தாலுகா ஆபீஸ் முன்னிலையில், உணவுப் போராட்டத்தை ஒட்டி 20 தோழர்கள் சத்தியாக்கிரஹம் செய்தனர். கிராமத்திலுள்ள கடைகள் அடைக்கப்பட்டன. பாரத்தோடு கட்சி கிளையிலிருந்து தோழர் சங்கரகாரணவர் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு 5 மைல் தொலைவிலுள்ள உடும்பன்சோலை தாலுக்கா அலுவலகம் முன்பு சத்தியாக்கிரஹம் நடைபெற்றது.



# தமிழக கம்யூனிஸ்ட் கட்சி மாநாடுகள்

## கோவை மாவட்ட மாநாடு

**செந்தொண்டர்கள் வீர நடை போட்டனர்! மாதர்கள் அணிவகுத்து முழங்கினர் தாரைதப்பட்டைகள் ஒலிக்க, நாதசுரஇசைஒலியும், வேஷங்கள், ஆட்டங்கள் உட்பட 3000த்துக்கு மேற்கொண்ட மக்களின் ஊர்வலம் 20,000 பேர் கொண்ட பொதுக்கூட்டம்.**

திருத்தல்வாதிகளை எதிர்த்து கோவை ஜில்லா முழுவதிலுமுள்ள கட்சி அணிகளும், தொழிலாளி வர்க்கமும் நடத்திய போராட்டத்தின் சரித்திரத்தில் வெற்றியைக் குறிக்கும் ஒரு மைல் கல் என்று குறிப்பிடும் நிலைமையில், கோவை நகர நஞ்சப்பராவ் கல்யாண மண்டபத்தில், ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சியின் 8-வது மாநாடு 18, 19, 20 தேதிகளில் சிறப்பாக நடைபெற்றது.

கோவை ஜில்லாவிலுள்ள 14 இடைக் கமிட்டிகள், ஜில்லா கமிட்டியின் நேரடிப் பொறுப்பிலுள்ள 5 கிளைகள் ஆகிய அமைப்புகளிலுள்ள 1200க்கு மேற்பட்ட கட்சி அங்கத்தினர்களையும் 100க்கு மேல் பரீட்சார்த்த அங்கத்தினர்களையும் பிரதிநிதித்துவப் படுத்தும் 153 பிரதிநிதிகள் 125 பேர் பங்கு கொண்டனர். திரிபுவாதிகள் அங்க அமைப்புகள் இல்லாமல் சிதைத்திருந்த திருப்பூர் பிரதேச கமிட்டியை சீர்திருத்தியும், ஈரோடு, பவானி, பெருந்துறை, சென்னிமலை, பொள்ளாச்சி, வால்பாறை, கோவை நகரம், சிங்காநல்லூர் பஞ்சாயத்து யூனியன், சர்க்கார் சாமக்குளம் யூனியன் பிரதேசங்களிலிருந்து கமிட்டிகளை முறைப்படுத்தி அமைத்தும், ஊத்துக்குளி மற்ற சில பகுதிகளில் திரிபுவாதிகள் சேர்த்து வைத்திருந்த போலி அங்கத்தினர்களை நீக்கியும் நடைபெற்ற போராட்ட இயக்கத்தில் வந்துள்ள உறுதிமிக்க. உருக்குப் போன்ற கட்டுப்பாடுள்ள தோழர்களைக் கொண்ட கட்சி அங்கத்தினர்களின் முன்வரிசை ஊழியர்களான 125 பிரதிநிதிகள் பங்கு கொண்டனர்.

18-ம் தேதி காலை மாநாடு ஆரம்பமாகியது. கம்யூனிஸ்ட் கட்சி தலைவரும், கோவை தொழிலாளி மக்களின் நன்மதிப்பைப் பெற்ற ஊழியருமான தோழர் பி.ராமமூர்த்தி மாநாட்டு மண்டபத்துக்கு முன் செங்கொடி ஏற்றி வைத்தார். மாநாட்டின் தலைமைக் குழுவாக ஸ்டேன்ஸ் மில் தொழிலாளி தோழர் நஞ்சப்பன், கட்சி ஊழியரும், விவசாயியுமான தோழர் ஆர். வெங்கிடு, ஈரோடு கமிட்டி செயலாளர் தோழர் நாச்சிமுத்து ஆகியோர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தியாகிகள் வணக்கத்துக்குப் பின் தோழர் பி. ராமமூர்த்தி அவர்கள் கொடியேற்றி விழா உரையை சுருக்கமாக முடித்து, கட்சி நகல் திட்டத்தின்மீது 2 மணி நேரம் அடிப்படையான வரையறுப்புகளை விளக்கி ரிப்போர்ட் செய்தார். நிகழ்ச்சி நிரலில் முதல் நாள் 6 மணிநேரம் திட்டத்தின்மீது விவாதத்திற்காக ஒதுக்கப்பட்டிருந்தது போதாமல் 2-ம் நாள், 3-ம் நாட்களிலும் சில மணி நேரங்கள் தொடர்ந்து விவாதம் நடந்தது. 24 தோழர்கள் விவாதத்தில் பங்குகொண்டு 13 மணி நேரம் விவாதம் நடைபெற்றது. உயர்ந்த அரசியல் தரமானதும், கோட்பாட்டு ரீதியானதும், ஆழமானதுமான விவாதம் மாநாட்டுக்கே சிறப்பளித்தது.

இரண்டாம் நாள் நிகழ்ச்சிநிரல்படி 19-ம்தேதி மதியம், ஏற்கனவே அச்சிட்டு வழங்கப்பட்டிருந்த, திருத்தல்வாதத்தை எதிர்த்து நடத்திய போராட்டங்களின் அரசியல், ஸ்தாபன நடைமுறையைப் பற்றிய விரிவான அறிக்கையை தோழர் கே. ரமணி சுருக்கமாக ரிப்போர்ட் செய்தார். 36 தோழர்கள் விவாதத்தில் பங்கெடுத்தனர். பல ஆலோசனைகளையும், திருத்தங்களையும் வழங்கினர். அதன் பிறகு, 27 பேர்களைக்கொண்ட புதிய ஜில்லாக் கமிட்டி ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டது. அக்டோபர் 15 முதல் 18 வரை மதுரையில் நடக்கும் மாநில மாநாட்டிற்கு 22 பிரதிநிதிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

20-ம்தேதி மாலை தெப்பக்குளம் மைதானத்திலிருந்து புறப்பட்ட மாபெரும் ஊர்வலம் நகரில் அலங்கரிக்கப்பட்டிருந்த வீதிகளின் வழியாக வலம் வந்து சிதம்பரம் பூங்காவை 7-30 மணிக்கு அடைந்தது. அங்கு நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்திற்கு தோழர் எஸ்.கிருஷ்ணன் தலைமை வகித்தார். தோழர் பி. ராமமூர்த்தி அவர்கள், விலைவாசி உயர்வை எதிர்த்துப் போராட சகல கட்சிகளும் முன்வரவேண்டுமென்றும், காங்கிரஸ் கட்சியின் ஜனவிரோதக் கொள்கைகள், நடைமுறையைக் கண்டித்தும், உற்சாகமூட்டும் சொற்பொழிவாற்றினார்.

மாநாட்டில் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தி, அரிசி விலை குறைக்கவும், அரசாங்க வர்த்தகம் வேண்டுமென்றும், பாதுகாப்பிலுள்ள கம்யூனிஸ்ட் தலைவர்களை விடுதலைசெய்யவும், போனஸ் கமிஷன் அறிக்கையைக் கண்டித்தும், மின்சார வெட்டு வராமல் தடுக்க அனல் மின்சார நிலையம் ஏற்படுத்தவும், வற்புறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## சென்னை மாவட்ட மாநாடு

ஓட்டேரி, செல்லப்ப முதலித் தெரு, மல்லிகா கல்யாண மண்டபத்தில், செப்டம்பர் 18, 19, 20 ஆகிய தேதிகளில் சிறப்பாக நடைபெற்றது. மாவட்ட மாநாட்டிற்கு முன்னர் சென்னை நகரில் கட்சியின் 41 கிளை மாநாடுகள் நடைபெற்றன. அந்த மாநாடுகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட 108 பிரதிநிதிகள் மாவட்ட மாநாட்டில் கலந்துகொண்டனர். தோழர் எம். டி. டேவிட் மாநாட்டின் ஆரம்பத்தில் செங்கொடி ஏற்றி வைத்தார்.

தோழர்கள் சோமசேகர், எம். வரதன், எம். ஆர். ஜி. பாண்டியன் ஆகியோரைக்கொண்ட தலைமைக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. முதலில் தியாகிகளுக்கும் மறைந்த கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களுக்கும் அஞ்சலி செலுத்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

உலக கம்யூனிஸ்ட் இயக்கத்தில் தத்துவார்த்தப் பிரச்சினைகள் குறித்து தோழர் வி. பி. சிந்தன் விளக்கவுரையாற்றினார். கட்சி நகல் திட்டம் குறித்து தோழர் ஏ. பாலசுப்ரமணியம் விளக்கிப் பேசினார். நகல் திட்டத்தின்மீது நடந்த விவாதத்தில் 33 தோழர்கள் பங்கெடுத்துக்கொண்டனர். இந்த விவாதத்திற்கு தோழர் வி. பி. சிந்தன் விளக்கமாக பதிலளித்துப் பேசினார். மாவட்டக் கட்சி ஸ்தாபன அறிக்கையை தோழர் கஜபதியும் தொழிற்சங்க அரங்க அறிக்கையை தோழர் ஹரிபட்டும் சமர்ப்பித்தனர். இதன்மீது நடந்த விவாதத்தில் 31 பேர் கலந்துகொண்டனர்.

உணவுப் பிரச்சினை, பஸ் தொழிலாளர் போராட்டம், ஹோட்டல் தொழிலாளர்கள் பிரச்சினை, பீடித் தொழிலாளர்கள் கோரிக்கைகள், குடிதண்ணீர் மற்றும் குடிசைவாழ்வோர் பிரச்சினைகள், நகர போலீஸ் சட்டம் ஆகியவை பற்றி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மாநில மாநாட்டுக்கு 11 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 21 தோழர்களைக் கொண்ட சென்னை மாவட்டக் கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. தோழர் கஜபதி காரியதரிசியாகவும், தோழர்கள் வி. பி. சிந்தன், ஹரிபட், பி. வி. கே. கிருஷ்ணன், சோமசேகர் ஆகியோர் செயற்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மழையினால் பொதுக்கூட்டம் இடையில் நிறுத்தப்பட்டது.

## திருச்சி மாவட்ட மாநாடு

செப். 19.20தேதிகளில் திருச்சி மாவட்டக் கட்சியின் 6-வது மாநாடு கரூரில் சிறப்பாகநடைபெற்றது. கரூர் தாலுக்கா தோழர்கள் இரவுபகலாக செயல்பட்டு நகரத்தையே செங்கொடி தோரணங்களால் அழகுபடுத்தி வைத்திருந்தனர். எங்கு நோக்கினாலும் மாநாட்டு விளம்பரம் காட்சியளித்தது. கரூர் நகரம் கண்டிராத ஊர்வலமும், பல ஆயிரக் கணக்கான மக்கள் திரண்ட மாபெரும் பொதுக்கூட்டமும் 20 தேதியன்று நடைபெற்றது. முதல் நாள் 19-ம் தேதி மாலை தோழர் எஸ். நல்லுசாமி தலைமையில்,

(7-ம் பக்கம் பார்க்க)

5-ம் பக்கத் தொடர்ச்சி

லாளிவர்க்க சர்வ தேசியத்தையும் எதிர்க்கிற போக்கும், பூர்ஷ்வா தேசியவாதப் போக்கும் வளர்ந்தன.

ஹங்கேரிய எதிர்ப்புரட்சியின் போது, கட்சித் தலைமையின் ஒரு பகுதி, எதிர்ப் புரட்சியை முறியடிக்க சோவியத்யூனியனும்சோஷலிஸ முகாமும் மேற்கொண்ட ஆயுத உதவியைஎதிர்த்து சோவியத்யூனியனின் நடவடிக்கையைக் கண்டிக்கும் வகையில் மத்தியக் கமிட்டியின் ஒரு உறுப்பினர் அக் கமிட்டியிலிருந்து ராஜினாமா செய்யுமளவிற்குச் சென்றார்.

சீன - இந்திய எல்லைப்பிரச்சினையில் கட்சித் தலைமையின் பெரும்பான்மைப்பகுதி வெளியிட்ட தீர்மானங்களிலும் அறிக்கைகளிலும் பூர்ஷ்வா தேசியவாதப் போக்கின் வளர்ச்சியை அப்பட்டமாகப் பார்க்க முடியும்.

மாநிலங்களுக்கிடையிலுள்ள பிரச்சினைகளில், மாநில எல்லைப் பிரச்சினைகள் தண்ணீர் பிரச்சினைகளில் ஆகியவற்றில், அந்தந்த தேசிய இனங்களின் பூர்ஷ்வாக்களுக்குப் பின்னால், விமர்சனப் பார்வையின்றி சில மாநில கட்சி ஸ்தாபனங்கள் திரண்டு நின்று ஒருமாநிலகட்சிஸ்தாபனத்திற்கெதிராக மற்றொரு மாநில கட்சிஸ்தாபனம் பகிரங்க சர்ச்சையிலீடுபடும் போக்கு ஏற்பட்டுள்ளது. பார்லிமெண்ட் வேலை குறித்து, ஒருபுரட்சிகரகண்ணோட்டத்திற்குப் பதிலாக, ஒரு சமூக ஜனநாயக கண்ணோட்டம் வளர்ந்து வருவதில் திருத்தல் வாதம் பிரதிபலிக்கிறது.

பூர்ஷ்வா வர்க்கம் குறித்து வர்க்கப் பார்வையற்ற ஒரு கண்ணோட்டத்திலும், அதனுடைய இரட்டைத் தன்மையைப் புரிந்து கொள்ளாமலிருப்பதிலும், கம்யூனிஸ்ட் கட்சியின் சுதந்திரமான பாத்திரத்தை மறுப்பதிலும் திருத்தல்வாதம் பிரதிபலிக்கிறது

வெகுஜன அரங்க வேலைகளில் வெறும் பொருளாதாரக் கோரிக்கைக் கண்ணோட்டத்தில் இது பிரதிபலிக்கிறது.

தேர்தல் உறவு ஏற்பாடுகளை, ஜனநாயக முன்னணியுடன்சேர்த்துக் குழப்புவதில் இது பிரதிபலிக்கிறது. தொழிலாளி விவசாயி நேச அணியின் முக்கியபாத்திரம் கட்சியின் சுயேச்சையான வளர்ச்சியின் அவசியம் ஆகியவற்றைக் குறைத்துப் பார்ப்பதில் இது பிரதிபலிக்கிறது.

எனவே இந்த திருத்தல்வாத அபாயத்தை நம் கட்சியில் நாம் எதிர்த்துப் போராடவேண்டும். ஆனால் இப் போராட்டத்தை நடத்தும்பொழுது, வறட்டுத்தத்துவ வாதம் செக்டேரியனிஸம் ஆகிய போக்கிற்கெதிராகவும் நாம் விழிப்புணர்ச்சியுடன் இருக்க வேண்டும்.

(முற்றும்)

2-ம் பக்கத் தொடர்ச்சி

# இந்திய - சீன எல்லைப் பிரச்சினை முடிய அரசியல் தீர்வு காணவேண்டும்

தெற்கு வியட்னாம் படைகளுக்கும் ஆயுத சப்ளை செய்தார்கள். இதனால் கடந்த பல ஆண்டுகளாக தெற்கு வியட்னாமில் அமைதி நிலவவில்லை. இந்தச் செய்கையைக் கண்டித்து நம் அரசாங்கம் நடவடிக்கை எடுத்ததா? இல்லை. தெற்கு வியட்னாமைப் பொறுத்தவரை அங்குள்ள அமெரிக்கத் துருப்புகள் அனைத்தும் வாபஸ் வாங்கப்படவேண்டும். ஜெனிவா உடன்படிக்கையின்படி தேர்தல்களை நடத்துவதற்கும், அதன் மூலம் வியட்னாமை ஒன்றுபடுத்துவதற்கும் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும். இந்திய அரசாங்கம் இந்த நிலைமையை மேற்கொண்டு, அமெரிக்காவின் துருப்புகள் தெற்கு வியட்னாமிலிருப்பதைப் பகிரங்கமாக கண்டித்திருக்கவேண்டும்.

தங்களுடைய நாட்டின் சுதந்திரமும், கூட்டுசேராக் கொள்கையும் அமெரிக்கர்களால் பயமுறுத்தப்படுகிறதென்று கம்போடியப் பிரதம மந்திரி பலதடவை அறிக்கைகள் வெளியிட்டுள்ளார் என்பதை நாமறிவோம்.

லாவோஸ் பிரதம மந்திரியான திரு. சுவர்ணபௌமா கூட, மூன்று நாட்களுக்கு முன் பாரீஸில் பேசுகையில், தெற்கு வியட்னாமில் அமெரிக்கர்கள் இருப்பது தான் லாவோஸ் நாட்டில் நிரந்தரமான தகராறு இருப்பதற்கான காரணமென்று குறிப்பிட்டுள்ளார். எனவே இத்தகைய பிரச்னைகளில் நாம் ஒரு சரியான நிலையைமேற்கொள்ளாவிட்டால் நம்மைப்பற்றி ஒரு சரியான அபிப்பிராயத்தை ஆசிய ஆப்பிரிக்க நாடுகளில் உண்டாக்குவது சாத்தியமல்ல.

ஆப்பிரிக்க நாடுகளுடன் முன்னைக்காட்டிலும் சிறந்த பொருளாதார உறவுகளை நாம் வைத்துக் கொள்ளப் போகிறோமென்று சொல்லப்படுகிறது. நல்லது, ஆனால் பொருளாதார உறவுகளை அபிவிருத்தி செய்வதற்கான வழி என்ன என்பதே பிரச்னையாகும், திரு. டி.எஸ். ஜோஷி ஆப்பிரிக்க நாடுகளுக்குச் சென்றிருப்பதாகவும், சில ஒப்பந்தங்களை ஏற்படுத்த அவர் திட்டமிட்டிருப்பதாகவும் பத்திரிகைகளில் செய்தி வெளிவந்துள்ளது. எத்தகைய ஒப்பந்தங்கள்? நம்முடைய நாட்டின் தனியார் துறை, முதலாளிகளுக்கும் அந்த நாடுகளிலுமுள்ள சிலருக்குமிடையே கூட்டுக் கம்பெனி ஒப்பந்தங்களே அவர் ஏற்படுத்த முயற்சிப்பது. இதேபோல் இந்திய தொழில் மற்றும் வர்த்தக சம்மேளனத்தின் சார்பாக மற்றொரு தூதுக்குழு அந்நாடுகளுக்குச் செல்லவிருக்கிறது. அத்தூதுக் குழுவும் முன்சொன்ன கூட்டுக் கம்பெனி ஒப்பந்தங்களுக்கு முயற்சிக்கப் போகிறதாம். இத்தகைய ஒப்பந்தங்களினால் ஏற்படப் போவது என்ன? நம் நாட்டின் முதலாளிகளுடைய சொந்த லாப நோக்கத்தை நாம் அறிவோம். அவர்களுடைய இந்த லாப நோக்கத்தினடிப்படையில், ஆப்பிரிக்கநாடுகளுடன் சிறப்பான பொருளாதார உறவுகளைக் கட்டி வளர்ப்பதற்கு நம் அரசாங்கம் முற்படுகிறது, இந்த வழிமுறையின் மூலமாக அந்நாடுகளுடன் சிறப்பான பொருளாதார உறவுகளை கட்டி வளர்க்க முடியாதென்று நான் அரசாங்கத்தை எச்சரிக்கிறேன். மாறாக நம் நாட்டின் முதலாளிகளுடைய லாபவேட்டையின் காரணமாக அந்த நாடுகளிலுள்ள மக்கள் நம்மைப்பற்றித் தவறாக நினைப்பதற்கு இடமேற்படும் தங்களுடைய நாடுகளைச் சுரண்டுவதற்கு வந்துள்ள ''ஒரு பெரிய பெருமாளாக'' நம்மை அந்நாடுகளின் மக்கள் கருதுவார்கள். மேலே குறிப்பிடப்பட்டுள்ள ஒப்பந்தங்களின் விளைவாக ஏற்படக்கூடிய நேரடியான விளைவு இதுவாகவே இருக்கும்.

நாம் இம்மாதிரியாக நடந்து கொண்டால் ஆப்பிரிக்க நாடுகளில் சீனாவோடு போட்டியிடுவதென்பது எவ்வாறு சாத்தியம்? இலங்கையைப் பொறுத்தவரையில், அங்கு விளையும் ரப்பரை உலக மார்க்கெட்டில் அதற்குக் கிடைக்கக்கூடிய விலையைக் காட்டிலும் கூடுதலான விலையில் சீனா வாங்கிக்கொள்ள சம்மதிக்கிறது. உலக மார்க்கெட்டில் இருப்பதைக் காட்டிலும் குறைவான விலைக்கு இலங்கைக்கு அரிசிசப்ளை செய்ய சீனா ஒப்புக்கொள்கிறது. உறவுகளை வளர்ப்பதற்குச் சீனா கடைப்பிடிக்கும் வழி இதுவேயாகும். பர்மாவுக்கு வட்டியில்லாமல் கடன்கொடுக்க சீனா முன்வந்துள்ளது. அந்த அடிப்படையில் அங்கு பஞ்சாலைத் தொழிலை உருவாக்குவதற்குச் சீனா ஒப்புக்கொண்டுள்ளது. அந்தத் தொழிலிலிருந்து கிடைக்கும் லாபத்தை சீனா கோரவில்லை. இன்று நாம் நம்முடைய முதலாளிகளின் தனிப்பட்ட லாப நோக்கத்தினடிப்படையில், இதரநாடுகளுடன் நம்முடைய பொருளாதார உறவுகளை வளர்ப்பதற்கு முற்பட்டால் அது பயன்படாது. வெறும் பிரச்சாரத்தில் மட்டும் என்ன பயன்? பிரச்சாரம் செய்வதற்கு ஒரு நல்ல கொள்கை இருக்க வேண்டும். எங்களுடைய முதலாளிகள் உங்கள் நாடுகளுக்கு வந்து உங்களைச் சுரண்டிப் பெறுகிற லாபங்களை எங்கள் நாட்டிற்கு கொண்டு வருவார்கள் என்று கூறுவது ஒரு சரியான கொள்கையாகுமா? எனவேதான் இன்றைய கண்ணோட்டத்தினடிப்படையில் அந்த நாடுகளுடன் நம்முடைய உறவுகளை வளர்ப்ப

(8-ம் பக்கம் பார்க்க)

6-ம் பக்கத் தொடர்ச்சி

## திருச்சி மாநாடு...

தோழர்கள் பி. ராமமூர்த்தி. பி. பாப்பா உமாநாத் ஆகியோர் கொள்கை முழக்கம் செய்தனர். மழைதூறலால் சிரமம் இருந்தாலும் கூட்டம் நடைபெற்றது. இரண்டாம்நாள் தோழர் கே.பி. ராமசாமி தலைமையில் தோழர்கள் என். சங்கரைய்யா, பி. ராமசந்திரன், சி. சோளியப்பன், ஏ. எல். சண்முகம் பி.ஏ.பி.டி. ஆகியோர் சிறப்பாக சொற்பொழிவாற்றினர். தோழர்செல்லமுத்து நன்றி கூறினார். பாவலர் வரதராஜன் குழுவினரின் இன்னிசை பிரமாதமாக அமைந்தது

இரு தினங்களும் பிரதிநிதிகள் மாநாடு கரூர் ராஜலிங்க மன்றத்தில் நடைபெற்றது. தலைமை குழுவினராக தோழர்கள் பாப்பா உமாநாத், எஸ். நல்லுசாமி, பி பாண்டியன் முதலியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 19-ந்தேதி பகல் 12 மணிக்கு பிரதிநிதிகளும் பொதுமக்களும் அணிவகுத்து நிற்க தோழர் பி. ராமமூர்த்தி, எம். பி. செங்கொடியை ஏற்றி வைக்க தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தி மாநாடு துவங்கியது. கட்சியின் நகல் திட்டம் பற்றி தோழர் பி ராமமூர்த்தியும் சர்வதேச தத்துவார்த்த நிலைபற்றி என். சங்கரையாவும் மிகத்தெளிவாக விளக்கினார்கள். 28-க்கு மேற்பட்ட பிரதிநிதிகள் விவாதத்தில் பங்கெடுத்து பல யோசனைகளையும் கூறினார்கள். ஜூன் மாதம் முதல் நடைபெற்றுள்ள ஸ்தாபன வேலைகள், மற்ற அரங்க வேலைகள் பற்றி தோழர். பி. ராமச்சந்திரன் சமர்ப்பித்த ரிப்போர்ட்டையும் விவாதத்தில் செழுமைப்படுத்தினர். மொத்தம் தேர்ந்தெடுக்கப்பட்ட 132 பிரதிநிதிகளில் 120 பேர்கள் வரை பங்கெடுத்தனர். 1964ம் ஆண்டிற்கான கட்சி உறுப்பினர் பதிவுக்கு கோட்டா ஏற்கப்பட்டு நவம்பர் இறுதிக்குள் இதை முடிக்க முடிவு செய்யப்பட்டது உணவுக்காக மக்கள் படும் அவதியை ஆங்காங்கே போக்க நடவடிக்கை எடுக்க திட்டமிடப்பட்டது, மூன்று அடுக்கு ஸ்தாபன அமைப்புக்கு பதிலாக இரண்டடுக்கு முறையில் 25 பேர்களைக் கொண்ட ஜில்லாக்கமிட்டியும், 7 பேர் கொண்ட செயற்குழுவும் ஏகமனதாக கரகோஷத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டது. செயலாளராக தோழர் பி. ராமச்சந்திரன் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

முசிறி, குளித்தலையை இணைக்க காவேரியில் பாலம் கட்டுவது, புதுக்கோட்டை, கிழக்கு ராமநாதபுரம், அறந்தாங்கி பகுதியைப் பின்தங்கிய பகுதியாக திட்டக்குழுவிற்கு அறிவித்து 4-வது ஐந்தாண்டு திட்டத்திலேயே இப்பகுதி அபிவிருத்திக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமெனவும், இனாம் சட்டம் நிறைவேற்றி ஒருவருடம் ஆகியும், அதற்கானவிதிகளை அமுலாக்க மறுக்கும் தமிழக அரசைக் கண்டித்து உடனே விதிகளை பிரசுரிப்பதுடன் இடையில் இனாம்தார்கள் செய்துள்ள எல்லா மாற்றங்களையும் ரத்துசெய்து விவசாயிகளுக்கு பட்டா கிடைக்க அரசாங்கத்தை வற்புறுத்த கிளர்ச்சி நடத்தவும், நொய்யல், குடவனாறு திட்டத்தை உடனே அமுலுக்குக் கொண்டுவரக் கோரியும், அரசியல் கைதிகளை விடுதலைசெய்யுமாறும் மற்றும் பல்வேறு பகுதிகள் குறித்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது. மக்கள் பகுதியினர் அரிசி கிடைக்காதததால் படும் அவதியைப் போக்க அந்த மக்களைத் திரட்டி உடனுக்குடன் கிளர்ச்சி நடத்தவும் சர்க்கரைக்கு கொடுத்ததுபோன்று அடையாள கார்டுகளை ஒவ்வொரு வீட்டுக்கும் கொடுத்து அரிசி கிடைக்க உத்திரவாதம் செய்யுமாறும் தீர்மானங்கள் போடப்பட்டது. முடிவுரையாக தோழர் என். சங்கரையா பேசினார். வரவேற்புக்குழு சார்பில் தோழர் சோளியப்பன் நன்றி தெரிவித்தார், சர்வதேச கீதத்துடன் மாநாடு முடிவுற்றது,

## மாநாடு வெற்றிபெற நிதியளிப்பீர்!

தோழர்களே!

தமிழகக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஏழாவது மாநில மாநாட்டை நடத்தவேண்டிய பெரும் பொறுப்பு மதுரை நகரக் கமிட்டிக்கு அளிக்கப்பட்டுள்ளது மாநாடு சிறப்பாக நடந்தேற நிதி தேவைப்படுகிறது.

**தோழர் எஸ். சேஷகிரி,**
1, மண்டையன் ஆசாரி சந்து,
டவுன்ஹால் ரோடு, மதுரை.

என்ற முகவரிக்கு நிதி அனுப்பி மாநாடு வெற்றிபெற உதவுங்கள்.

**எம் ஆர். வெங்கட்ராமன்,**
கன்வீனர்,
தமிழ் மாநில இணைப்புக்குழு,
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி,

7-ம் பக்கத் தொடர்ச்சி

# பாகிஸ்தானிடம் நிபந்தனையின்றி பேசும்போது சீனத்துடன் பேச மறுப்பதேன்?

தற்கு முடியாது என்று நான் கூறுகிறேன்.

அமெரிக்காவிடமிருந்து உதவி பெறுகிற வாய்ப்பு நம்முடைய நாட்டின் அயல்நாட்டுக் கொள்கையைப் பாதிக்கிறது. நம்முடைய ஏகாதிபத்திய எதிர்ப்புப் பாத்திரத்தை பின்னுக்குத் தள்ளும்படியான நிலைமையை இந்த உதவி உண்டாக்குகிறது. வேறு விதமாக நடந்தால், இந்த உதவி கிடைக்காமல் போய்விடுமென்ற பயம் நம்மைப் பாதிக்கிறது. அமெரிக்க ஏழாவது கடற்படையின் ரோந்து சுற்றும் நடவடிக்கைகளைக் கண்டிக்க மறுக்கும் நம்முடைய போக்கிற்கும் இந்த உதவிக்கும் சம்பந்தமில்லையா என்பதை இந்திய அரசாங்கம் தன் மனச்சாட்சியைப் பரிசோதனை செய்து பார்க்கட்டும்.

சீன—இந்திய எல்லைப்பிரச்சினைக்கு வருவோம். இப் பிரச்சினையை ராணுவ ரீதியில் ஒரு பொழுதும் தீர்க்க முடியாது. பலாத்காரத்தைக் கொண்டு, அல்லது ராணுவப் படைகளைக் கொண்டு, உலகின்இரண்டு மிகப் பெரிய நாடுகளான சீனாவும், இந்தியாவும் ஒன்றை ஒன்று ஒருபொழுதும் அடக்கிவிட முடியாதென்பதை காலஞ்சென்ற திரு. ஜவஹர்லால் நேரு முன்பு கூறியுள்ளதை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். ராணுவ ரீதியில் இப்பிரச்னையைத் தீர்க்க முடியாதென்றால், பின் என்ன வழி சாத்தியம்? இன்றோ நாளையோ, பல ஆண்டுகள் கழித்தோ, அரசியல் அடிப்படையில் பேச்சுவார்த்தைகளின் அடிப்படையில் இப் பிரச்னைக்கு ஒரு தீர்வு கண்டுபிடிக்கப்படவேண்டும்? இவ்விரு நாடுகளின் தலைமைகளுக்கிடையில் மிகவும் உயர்ந்த மட்டத்தில் நடைபெறும் பேச்சுவார்த்தைகளின் அடிப்படையில் இப் பிரச்னைக்குத் தீர்வு கண்டுபிடிக்கப்பட வேண்டும். இறுதியில் இந்த ஒரேவழியின் மூலமாக மட்டுமே இப் பிரச்னை தீர்க்கப்படப் போகிறது,

சீன - இந்திய எல்லைப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வுதான் கண்டுபிடிக்கப்பட வேண்டுமென்பது ஒப்புக்கொள்ளப்படுகிற பொழுது, இன்றுள்ள முட்டுக்கட்டை நிலைமை நீடிப்பது நமக்கு உதவியளிக்கிறதா? இல்லையென்று நான் கூறுகிறேன். இந்த முட்டுக்கட்டை நிலைமை நீடிக்க நம் பொருளாதாரம் மேலும் மேலும் அதிக சிக்கலுக்கு உட்படுகிறது: உதவிதேடி, ராணுவ உதவி தேடி நாம் அலையவேண்டிய வேலை அதிகரிக்கிறது. இதனால் இந்த முட்டுக்கட்டை நிலைமையை உடைக்க நாம் முயற்சி செய்ய வேண்டும். இதற்கு இந்திய அரசாங்கம் முன் முயற்சி எடுக்கவேண்டும்.

சீனத் துருப்புகள் வாபசாகிக் கொண்டிருக்கும் பொழுது, கொழும்பு நாடுகளின் திட்டம் இயற்றப்பட்டது, சீனப்படைகள் வாபஸ்வாங்கியபிறகு போர் நிறுத்தத்தை உறுதிப்படுத்த சில நடவடிக்கைகளை கொழும்பு திட்டம் வகுத்திருந்தது: அதன்பிறகு எல்லை பற்றிய பேச்சுவார்த்தைகள் துவங்க வேண்டுமென்று கொழும்பு திட்டம் கூறியது. இப்பொழுது ஏறக்குறைய இரண்டு வருடங்கள் கழிந்துவிட்டன. போர் நிறுத்தத்தை நாம் ஒப்புக்கொள்ளா விட்டாலும்கூட போர் நிறுத்தம் ஏறக்குறைய கடந்த இரண்டாண்டு காலமாக அமுலில் இருந்து வருகிறது. எனவே சீனப்படைகள் வாபஸ் வாங்கிக்கொண்டிருந்த பொழுது போர் நிறுத்தத்தை உறுதிப்படுத்துவதற்காகக் கொழும்பு திட்டம் கொடுத்த யோசனைகள் இன்று அவ்வளவாக அவசியப்படவில்லை இன்று அடிப்படை எல்லைப்பிரச்னையைப் பற்றியே பேச்சுவார்த்தை நடத்துவதற்கு முயற்சிப்பதுதான் முக்கியமானது.

லடாக் பகுதியிலுள்ள சீனாவின் ஏழு சிவில் காவல் நிலையங்களை சீனா வாபஸ்வாங்கிக்கொண்டால் அடிப்படை எல்லைப்பிரச்னை பற்றியே பேச்சுவார்த்தைகள்நடத்த இந்தியா தயார் என்பதை நாம் அறிவிக்கவேண்டும். ஐக்கிய நாடு சபையின் தீர்மானங்களை காஷ்மீர் விஷயமாக, பாகிஸ்தான் ஏற்றுக்கொள்ளவில்லை. இந்திய-பாகிஸ்தான் போர்நிறுத்த எல்லைக் கோட்டில் நூற்றுக்கணக்கான சண்டைகளை பாகிஸ்தான் உண்டாக்குகிறது. ஆனால் எந்த நிபந்தனையும்விதிக்காமல் பாகிஸ்தானுடன் காஷ்மீர் பற்றி பேச இந்திய அரசாங்கம் தயாராக உள்ளது. அப்படியானால் சீன விஷயத்தில் நாம் முன்முயற்சி எடுத்தால் என்ன? சீனாவுடன் நாம் ராஜதந்திர உறவுகள் வைத்துக்கொண்டுள்ளோம். பல விஷயங்கள் குறித்து அவர்களுக்குக் குறிப்புகளும், கடிதங்களும் அனுப்புகிறோம். அப்படியானால் எல்லைப் பிரச்னை பற்றி பேச்சுவார்த்தைகளை நடத்துவதற்கான சுமுகமான சூழ்நிலைமையை உண்டாக்குவதற்கு பூர்த்தி செய்யப்படவேண்டிய நிலைமைகள் என்ன என்பது குறித்து நாம் சீனாவுடன் நேரடியாகப் பேசினால் என்ன?

பாகிஸ்தானுடன் காஷ்மீர் பற்றி பேசுவதற்கு நாம் நிபந்தனை எதுவும் விதிக்கவில்லை. சீனாவுடன் பேசுவதற்கு மட்டும் நிபந்தனை விதிப்பதென்பது ஆசிய ஆப்பிரிக்க நாடுகளில் நம் கொள்கையைப் பற்றி ஒரு சந்தேகத்தை உண்டாக்குகிறது.

மேலும், இந்த எல்லைப்பிரச்னை நீடிக்கும்வரை, அமெரிக்க உதவியைத் தேடிப் போகும் போக்கு நீடிக்கும். இது நம்மைப்பற்றி நல்லெண்ணத்தை ஆசிய ஆப்பிரிக்க நாடுகளில் உண்டாக்காது. இதை அரசாங்கம் உணர்ந்துகொள்ள வேண்டும்,

# படை திரளுது! பாரீர்!

மதுரை மாநில மாநாட்டில் கலந்துகொள்ள ஆயிரமாயிரம் தோழர்கள் புறப்படத்தயாராகிவிட்டார்கள்! அக். 18-ம் நாள் பார்த்து, மதுரை மாநகர் போகும் வழிபார்த்து நிற்கின்றனர்.

நமக்குக் கிடைத்துள்ள செய்திகள் சில. இதோ கீழே தருகிறோம்.

மதுரை மாவட்டம் ஒட்டன்சத்திரம் யூனியன் கட்சிக் கமிட்டித் தோழர்கள் இரண்டு பஸ்களிலும் இருபத்தைந்து சைக்கிள்களிலும் புறப்படத் தயாராகிவிட்டனர்.

போடிநாயக்கனூரைச் சார்ந்த 64 தோழர்கள் ஒரு விசேஷ பஸ்ஸிற்கு ஏற்பாடு செய்துவிட்டனர்.

சேலம் மாவட்டத்தில் எங்கும் பேருணர்வு! சேலம் நகரத்திலிருந்து 3, நாமக்கல்லிலிருந்து 2, சூரமங்கலத்திலிருந்து 1, கருப்பூரிலிருந்து 1, மேட்டூரிலிருந்து1 அரூரிலிருந்து 1, பாபி ரெட்டி பட்டியிலிருந்து 1, தர்மபுரியிலிருந்து 1, திருச்செங்கோட்டிலிருந்து 1, எனப் பன்னிரண்டு பஸ்களில் புறப்பட முடிவு செய்துவிட்டனர்.

தஞ்சை மாவட்டமும் தயாராகிவிட்டதாக செய்தி அனுப்பிவிட்டது! மன்னார்குடியிலிருந்து பஸ் ஒன்று தயாராகிவிட்டது.

திருச்சியில் தீவிர ஏற்பாடுகள். இதுவரை கிடைத்த செய்திப்படி 8 பஸ்கள் அணிவகுப்புக்கு தயாராகிவிட்டனர்.

அதுமட்டுமா, அணிவகுப்பிற்கு பொன்மேனியிலிருந்து குதிரை ஆட்டமும், விராட்டிப்பத்திலிருந்து மயில் ஆட்டமும், துவரிமானிலிருந்து ஒயிலாட்டமும், அச்சம்பத்திலிருந்து தம்பு விளையாட்டும், அவனியாபுரத்திலிருந்து பட அலங்காரமும் மேளவாத்தியமும், பழங்கானத்தத்திலிருந்து கரக விளையாட்டும் வரப் போகின்றன. அணிவகுப்பிற்கு அடுக்கடுக்காய் ஏற்பாடுகளை தோழர்கள் செய்து வருகின்றனர் என்று மதுரை தெற்கு பஞ்சாயத்து யூனியன் கமிட்டிக் காரியதரிசி கே.சுப்பையா அறிவித்துள்ளார்

# "தீக்கதிர்" சிறப்பு மலர்

## பக்கங்கள் 16

## பிரதி விலை 25 காசு

**இருவண்ண முகப்பு!**

**பிரதிகளுக்கு முந்துங்கள்! முன்பணம் அனுப்புங்கள்!**

மதுரை மாநில மாநாட்டையொட்டி அடுத்த இதழ் 'தீக்கதிர்' சிறப்புமலராய் வெளிவரும். அழகிய இருவண்ண முகப்பில், பதினாறு பக்க அளவில் சிறப்புமலர் வெளிவரும். பல தலைவர்களின் விசேஷக்கட்டுரைகள் இடம்பெற்று சிறப்பு மலர் மணம்வீசும். பிரதிகள் வேண்டுவோர் முன்கூட்டியே தேவையான பிரதிகளுக்கு முன்பணத்துடன் கடிதம் எழுதவும்.

இம்மாத பில் விற்பனையாளர்களுக்கு அனுப்பப்பட்டுவிட்டன. தாமதமின்றி பில் தொகையை அனுப்பவும். சென்றமாத பாக்கித் தொகையை அனுப்பாதோருக்கு பத்திரிகை நிறுத்தப்பட்டுவிட்டன. போதுமான முன்பணத்துடன் பில் பாக்கியையும் அனுப்பி ஏஜன்சியை புதுப்பித்துக்கொள்ளவும்.

# தோழர் கே. ஆர். சுந்தரம் நமது அணியில்

பழைய மாகாணக் கவுன்சில் உறுப்பினரும் வடாற்காடு மாவட்ட கவுன்சில் செயற்குழு உறுப்பினரும், முக்கிய தொழிற்சங்க தலைவருமான தோழர் கே. ஆர். சுந்தரம் அவர்கள் டாங்கே கோஷ்டியின் நகல் திட்டத்தையும், நமது கட்சி நகல் திட்டத்தையும் படித்துப் பரிசீலித்த பிறகு, டாங்கே கோஷ்டியின் நகல் திட்டம் தொழிலாளி வர்க்கத்தை முதலாளி வர்க்கத்துக்கு காட்டிக் கொடுக்கக்கூடிய ஆபத்து உடையதென்ற முடிவுக்கு வந்தார். மேலும் நடைமுறையில் வடாற்காடு ஜில்லாவில் திருத்தல்வாத சீர்குலைவு வாதிகள் தொழிற்சங்கங்களை உடைத்து போட்டிச் சங்கங்களை அமைத்து சீர்குலைத்துவருவதையும் நேரில் கண்டபின்னர், டாங்கேகோஷ்டியை உதறிவிட்டு நமது அணியில் சேர்ந்துவிட்டார் என்பதையும், மதுரையில் நடக்க இருக்கும் மாநில மாநாட்டில் வடாற்காடு மாவட்டப் பிரதிநிதிகளில் ஒருவராகக் கலந்து கொள்வார் என்றும் வடாற்காடு மாவட்டக் கமிட்டி செயலாளர் தோழர் வி.கே.கோதண்டராமன் அறிவிக்கிறார்.

Edited by N. Sankaraiah and Published by M. N. Ravunni, 153, Dr. Natesan Road, Triplicane, Madras-5.
Printed by Sri A. N. Sathyanarayanan, Geetha Printing Works, 4, Hospital Road, Saidapet, Madras-15.